உ

சிவமயம்.

பத்தாந்திருமுறை யென்னும்

# திருமந்திரம் மூவாயிரம்

அறுபத்துமூன்று நாயனமாரு ளொருவராகிய

திருமூலநாயனாரியற்றியது.



இஃது,

சொ - சண்முகசுந்தர முதலியாரவர்களால்

சிவஞானபோதயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



சென்னை - சிந்தாதிரிப்பேட்டை.
சாவஜித்து ௵ ஆவணி ௴

## திருமூலநாயனார் சரித்திரம்.

நம்பியாண்டார்நம்பி திருவந்தாதி. ருசு-வது, செ

குடிமன்னுசாத்தனூர்க் கோக்குலமேய்ப்போன குரம்பைபுக்கு, முடிமன்னுகூனற் பிறையாளனைநன்னை முழுதமிழின், படிமன்னுவேதத்தின் சொற்படியேபர விட்டெனுச்சி, யடிமன்னவைத்தபிரான் மூலனாகின்ற வங்கணனே (ருசு)

உமாபதி சிவாசாரியார்

திருத்தொண்டர் புராணசாரம். ருச - வது, செ.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடனிறந்த துயரநீங்க பசுக்களுக்காக வுடலிற் பாய்ந்தபோத, வயலாகப் பண்டையுடலருளானமேவி யாவடுதண் டுறையணுகி கொருபாவாக, குயிலாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே. (ருச)

திருமந்திரம் பத்தாவது திருமுறை என்பதற்கு

திருமுறைகண்டபுராணம். உக - வது செ.

ஆகவளர் திருமுறையே ழருட்டிருவா சகமொன்று, மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ, போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே, பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். (உக)

திருமூலர் திருநக்ஷத்திரம்

ஐப்பசி ஸ்ரீ அச்வினிநக்ஷத்திரம்.

திருமூலநாயனார் இம்மூவாயிரச்செய்யுளன்றி வயித்தியத்தில் கஉ௦ - ரு000 - என்னுங் கோர்வைகளையுஞ் செய்திருக்கின்றனர்.

# இப்போது அச்சிட்டிருக்கும்
# சிவஞானபோதயந்திரசாலை
# புத்தகங்களின் விபரம்

| | |
|---|---|
| சிவஞானபோத விருத்தியுரை | ௧ - ௫ - 0 |
| திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், இருபாவிருபஃது, உண்மைவிளக்கம், திருவருட்பயன், வினாவெண்பா, கொடிக்கவி, உண்மைநெறி விளக்கம், போற்றிப்பஃறொடை, சங்கற்ப நிராகரணம், இவற்றினுரை. | ௧ - ௪௨ - 0 |
| சிவஞானசித்தியார் பரபக்ஷவுரை | ௧ - ௮ - 0 |
| சிவப்பிரகாச வியாக்கியானம். | ௧ - ௮ - 0 |
| திருமூலர் திருமந்திரம் | 0 - ௪௨ - 0 |
| இலிங்கபுராணம் | ௧ - ௮ - 0 |
| கூர்மபுராணம் | ௨ - ௮ - 0 |
| விநாயககவசம், சிவகவசம், சத்திகவசம், திரிபுரை அகவல், திரிபுரைதோத்திரம், காமாட்சியம்மன் அகவல், விநாயகர் அகவல், கந்தர் சஷ்டி கவசம் | 0 - 0 - ௬ |
| சௌந்தரி - யானந்தலகரி மூலம் | 0 - 0 - ௬ |
| அபிராமி யந்தாதி. | 0 - 0 - ௬ |
| கந்தரநுபூதி மூலமும் - உரையும் | 0 - 0 - ௬ |
| சரஸ்வதிதோத்திரம், சரஸ்வதியந்தாதி | 0 - 0 - ௩ |
| ஆத்திசூடி கொன்றைவேந்தன் மூலம் | 0 - 0 - ௪ |
| ௸ உரை. | 0 - 0 - ௬ |
| வாக்குண்டாம் மூலம் - உரையும், | 0 - ௧ - 0 |
| நல்வழி ௸ ௸ | 0 - ௧ - 0 |
| சமஸ்கிருத சிவஞானபோத சவியாக்கியானம் ஆகம உதாரணங்களுடன் | 0 - ௫ - ௩ |
| சித்தாந்த சாராவளி வியாக்கியானம். | |

சிவமயம்

# அதிகாரவகராதி.



உ

சிவமயம்.

## திருமூலநாயனார்

# திருமந்திரம் - ௩௲.



விநாயகர் காப்பு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

சிறப்புப்பாயிரம்.

போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை, நாற்றிசைக்
கும்நல்ல மாதுக்கு நாதனை, மேற்றிசைக் குட்டென் றிசைக்
கொரு வேந்தனுமாய், கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே.

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னருள், னின்றனன் மூன்
றினு ணான்குணர்ந் தானைந்து, வென்றனன் ஆறு விரிந்தன னேழும்
பர், சென்றவன் றானிருந் தானுணர்ந் தெட்டே (௨)

ஒக்கநின் றானை யுலப்பிலி தேவர்கள், நக்கனென் றேத்திடு நா
தனை நாடொறும், பக்கநின் றாரறி யாத பரமனைப், புக்குநின்
றுன்னியான் போற்றிசெய் வேனே. (௩)

அகலிடத் தாமெய்யை யண்டத்து வித்தைப், புகலிடத்
தெம்மெய்யைப் போதவிட் டானைப், பகலிடத் தும்மிர வும்ப
ணிந் தேத்தி, யிகலிடத் தேயிருள் நீங்கிநின் றேனே (௪)

சிவனொடொக்குந் தெய்வந் தேடினு மில்லை, யவனொடொ
ப் பாரிங்கி யாவரு மில்லை, புவனங் கடந்தன்று பொன்னொளி மி
ன்னுந், தவளச் சடைமுடித் தாமரை யானே. (௫)

அவனை யொழிய வமரரு மில்லை, யவனன்றிச் செய்யு மரு
ந்தவ மில்லை, யவனன்றி மூவரா லாவதொன் றில்லை, யவனன்
றி யூர்புகு மாறறி யேனே (௬)

முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன், றன்னையொப் பாயொன்று மில்லாத் தலைமகன், றன்னையப் பாவெனி லப்பனு மாயுளன், பொன்னையொப் பாகின்ற போதகத் தானே.

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன், ஞாயினு மீச னருளறி வாரில்லை, சேயினு நல்ல னணியனல் லன்பர்க்குத், தாயினு நல்லன் றாழ்சடை யோனே. (அ)

பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப், பின்னாற் பிறங்க விருந்தவன் பேர்நந்தி, யென்னாற் றொழப்படு மெம்மிறை மற்றவன், றன்னாற் றொழப்படு வாரில்லை தானே. (௯)

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந், தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந், தானே மழைபொழி தையலு மாய்நிற்குந், தானே தடவரைத் தண்கட லாகுமே. (௰)

அடலும் புடையுமெம் மாதியைத் தேர்க்கிற், பயலும் பெருந்தெய்வ யாதுமொன் றில்லை, முயலு முயலில் முடிவுமற் றாங்கே, பெயலு மழைமுகிற் பேர்நந்தி தானே. (௧௧)

கண்ணுத லானொரு காதலி னிற்கவு, மெண்ணிலி தேவ ரிறந்தா ரெனப்பலர், மண்ணுறு வார்களும் வானுறு வார்களு, மண்ண லிவனென் றறியகி லார்களே (௧௨)

மண்ணளந் தானம லரோன் முதற்றேவ, ரெண்ணளந் தின்ன நினைக்கிலா ரீசனை, விண்ணளந் தான்றன்னை மேலளந் தாரில்லை, கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. (௧௩)

கடந்துநின் றான்கம லமல ராதி, கடந்துநின் றான்கடல் வண்ணனெம் மாயன், கடந்துநின் றானவர்க் கப்புற மீசன், கடந்துநின் றெங்குங் கலந்துநின் றானே (௧௪)

ஆதியு மாயர னாயுட லுணின்ற, வேதியு மாய்விரிந் தாரந்திருந் தாரருட், சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையு, நீதியு மாய்நித்த மாகிநின் றானே (௧௫)

கோது குலாவிய கொன்றைக் குழற்சடை, மாது குலாவிய வாணுதற் பாகனை, யாது குலாவி யமரருந் தேவருங், கோது குலாவிக் குணம்பயில் வாரே. (௧௬)

காய மிரண்டுங் கலநது கொதிககினு, மாயங் கத்தூரி யது
மிகு மவவழி, தேசங் கலநதொரு தேவனென றெண்ணினு, மீ
ச னுறவுக கெதிரிலலை தானே (௧௭)

அதிபதி செய்த வளகை வேநதனை, நிதிபதி செய்த நி
றைதவ நோககி, யதுபதி யாதரித தாககம தாககி, யிதுபதி கொ
ளெனற வெமபெரு மானே (௧௮)

இதுபதி யேலங கமழபொழி லேழு, முதுபதி செயதவன
மூதறி வாளன, விதுபதி செய்தவன மெய்ததவ நோககி, யது
பதி யாக வமருகின றானே. (௧௯)

முடிவு பிறபபையு முன்னே படைத்த, வடிக ளுறையு மரா
னெறி நாடி, விடியு முழககமு மீச ருநவங், கடிமலராக குனற
மலையது தானே (௨௰)

வானப் பெருஙகொண்டன மாலயன வானவ, ரூனப பிற
வி யொழிககு மொருவனைக, கானக களிறு கதறப பிளநதவெ
ங, கோனைப புகழுமின கூடலு மாமே (௨௧)

மனததி லெழுகினற மாயநன னாட, னினைததத தறிவ னெ
னில்தா நினைககில, னெனககிறை யனபில னெனப ரிறைவன, பி
ழைககநின றாரபககம் பேணிநின றானே. (௨௨)

வலலவன வனனிக கிறையிடை வாரண, நில்லென நிறபி
தத நீதியு ளீசனை, யிலலென வேண்டா மிறையவர தமமுத, ல
லலும பகலு மருளுகின றானே. (௨௩)

போறறிசைதது மபுகழந தெம்புனி தனனடி, தேறறுமி
னனறுஞ சிவனடிக கேசெலவு, மாறறிய தெனறு மயலுறறுச
சினதனை, மாறறிநின றாரவழி மனனிநின றானே. (௨௪)

பிறபபிலி பிஞஞகன பேரரு ளாள, னிறபபிலி யாவாககு
மினப மருளுந, துறபபிலி தனனைத தொழுமின றொழுதான,
மறபபிலி மாயா விருததமு மாமே. (௨௫)

தொடரநதுநின றானைத தொழுமின றொழுதார், படரநது
நின றானபரி பாரக முற்றுங, கடநதுநின றானகம லம்மலா
மேலே, யுடநதிருந தானடிப புண்ணிய மாமே. (௨௬)

சந்தி யெனத்தக்க தாமரை வாண்முகத், தந்தியி னீச னருண்மக னேயென்று, நந்தியை நாளும் வணங்கப் படுமவர், புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே (௨௭)

இணங்கிநின் றானெங்கு மாகிநின் றானும், பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானு, முணங்கிநின் றானம ராபதி, நாதன, வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. (௨௮)

காணநில் லாயடி யேற்குற வாருள்ள, நாணநில் லேனுன்னை நான்றழு விக்கொள்ளக், கோணநில் லாத குணத்தடி யார்மனத், தாணிய ளாகி யமர்ந்துநின் றானே. (௨௯)

வானின் றழைக்கு மழைபோ லிறைவனுந், தானின் றழைக்குந் தழல்கொல் லென்று தயங்குவா, ரானின் றழைக்கு மதுபோ லென்னந்தியை, நானின் றழைப்பது ஞானங் கருதியே (௩)

மண்ணகத் தானொக்கும வானகத் தானொக்கும், விண்ணகத் தானொக்கும வேதகத் தானொக்கும், பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே, கண்ணகத் தேநின்று காதலித் தேனே.

தேவர் பிரானம பிரான்றிசை பத்தையு, மேவு பிரான்விரி நீருல கேழையுந், தாவு பிரான்றன்மை தானறி வாரில்லை, பாவு பிரானருட் பாடலு மாமே (௩௨)

பதிபல வாயது பண்டிவ் வுலகம், விதிபல செய்தொன்று மெய்ம்மை யுணரார், துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரு, மதியிலா நெஞ்சினுள் வாடுகின் றாரே. (௩௩)

சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல், வேந்த னமரர்க் கருளிய மெய்ந்நெறி, யார்ந்த சுடரண்ண லாயிர நாமமும், போந்து மிருந்தும் புகழ்வென் றானே (௩௪)

ஆற்றகி லாவழி யாகு மிறைவனைப், போற்றுமின் போற்றிப் புகழுமின் புகழ்ந்திடில், மேற்றிசைக் குங்கிழக் குத்திசை யெட்டொடு, மாற்றுவ னப்படி மாட்டமு மாமே. (௩௫)

அடியனை நந்தியை யாரா வமுதினை, யொப்பிலி வள்ளலை யூழி முதல்வனை, யெப்பரி சாயினு மேத்துமி னேத்தினால், லப்ப பி சீச னருள்பெற லாமே. (௩௬)

நானுநின் றேத்துவ னாடொறு நந்தியைத், தானுநின் றான்றழற் போலொருத்த மேனியன், வானுயர் நின்றதோர் மதிபோலுட னுளனுயிர், தானின்ற நீக்க யுயிர்க்கின்ற வாறே (௩௭)

பிதற்றொழி யேன்பெரி யானரி யானைப், பிதற்றொழி யேனிற வாவுரு வானைப், பிதற்றொழி யேனெங்கள் போநந்தி நானைப், பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் றானே (௩௮)

வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத், தீத்தவோ யங்கே நிற்கின்ற தேவனை, யேத்தியு மெம்பெரு மானென்ன றிறைஞ்சியு, மாத்தருள் செய்தீச னருள்பெற லாமே (௩௯)

குறைந்தடைந் தீசன் குரைகழ லாடு, நிறைந்தடை செம்பொனி னேரொளி யொக்கு, மறைஞ்சிடு செய்யாது வாழ்த்தவல்லார்க்குப், புறஞ்சடு செய்யான் புகுந்துநின் றானே.

சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப், புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல்லார்க்குக், கனஞ்செய்த வானுநற் பாகனு மங்கே, யினஞ்செய்த மானைப்போ லிணங்கிநின் றானே.

போயரன் றன்னைப் புகழ்வார் பெறுவது, நாயக னாண்முடி செய்ந்து வேந்தலரு, மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகினும், வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே (௪௨)

அரனடி சொல்லி யரற்றி யழுது, பரனடி நாடியே பாவிப்ப நாளு, முரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு, நிரனடி செய்து நிறைந்துநின் றானே. (௪௩)

போற்றியென் பாரம ராபுனி தன்னடி, போற்றியென் பா ரசுராபுனி தன்னடி, போற்றியென் பாரமனி தாபுனி தன்னடி, போற்றியென் னன்புள் விளங்கவைத் தேனே (௪௪)

விதிவழி யல்லதிவ் வேலை யுலகம், விதிவழி யின்பம் விருத்தமு மில்லை, துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும், பதிவழி

காட்டும் பகலவ னாமே. (௪௫)

அந்திவண் ணாவரனே சிவனே யென்று, சிந்தைசெய் வண்ண மிருந்தடி யார்தொழு, முந்திவண் ணாமுதல் வாபர னேயென், றுந்திவ வண்ணமென் மனம்புகுந் தானே. (௪௬)

மனையி லிருந்தவர் மாதவ ரொப்பர், நினைவி லிருந்தவர் நேசத்து நிற்பர், பனையு ளிருந்த பருந்தது போல, நினையாத வர்க்கில்லை நின்மலன் பந்தானே. (௪௭)

அடியார் பரவு மமரர் பிரானை, முடியால் வணங்கி முதல்வனை முன்னிப், படியா ருருமம் பரம்பர னெந்தை, விடியா விளக்கென்று மேவிநின் றேனே. (௪௮)

பரைபசு பாசத்து நாதனை யுள்ளி, வரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத், திரைபசு பாசச் செழுங்கடல் நீந்திக், கரைபசு பாசங் கடந்தெய்த லாமே (௪௯)

சூடுவ னெஞ்சிடை வைப்பன் பிரானென்று, பாடுவன் பன்மலர் தூவித் தொழுதுநின், றாடுவ னாடி யமரர் பிரானென், று, நாடுவ னுன்னை யறிவது தானே. (௫௦)

---

வேதச்சிறப்பு

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி, னோதத் தகுமற மெல்லா முளதர்க்க, வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற, வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே. (௧)

வேத முரைத்தானும் வேதிய னாகிலன், வேத முரைத்தானும் வேதா விளங்கிட, வேத முரைத்தானும் வேதியர் வேள்விக்காய், வேத முரைத்தானு மெய்ப்பொருள் காட்டவே (௨)

இருக்குரு வாமெழில் வேதத்தி னுள்ளே, யுருக்குணர் வாயுணர் வேதத்து ளோங்கி, வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங், கருக்குரு வாய்நிறை கண்ணனு மாமே. (௩)

திருநெறி யாவது சித்தசித் தன்றிப், பெருநெறி யாய பிரா

ளை நினைந்து, குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடு, மொருநெறி
யொன்றாக வேதாந்த மோதுமே (௪)

ஆறங்க மாய்வரு மாமறை, யோதியைக், கூறங்க மாகக்
குணம்பயில் வாரில்லை, வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்,
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. (௫)

பாட்டு மொலியும் பறக்குங் கணிகையா, ராட்ட மருந்த
வனியின் மாட்டாத, வேட்டு விருப்பார் விரதமில் லாதவ, ரீ
ட்டிடஞ் சென்றிக லனுற் றாரே (௬) ஆ. ௫௬.

---

ஆகமச்சிறப்பு.

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்த, னஞ்சொ டிருபத்
து மூன்றுள வாகமம், அஞ்சலி கூப்பி யறுபத் தறுவரு, மஞ்சா
முகத்தி லருட்பொருள் கேட்டதே (௧)

அண்ண லருளா லருளுஞ் சிவாகம மெண்ணி லிருபத்தெ
ண் கோடி நூறாயிரம், விண்ணவ ரீசன் விழுப்ப முரைத்தனர்,
கண்ணிநின் றப்பொரு ளேத்துவ னானே. (௨)

பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங், கண்டவர் கூ
று கருத்தறி வாரென்க, பண்டிதர் தங்கள் பதினெட்டிய
பாடையு, மண்ட முதலா னரன்சொன்ன வாறே (௩)

அண்ண லருளா லருளுந் திவ்யாகமம், விண்ணி லமரர் த
மக்கும் விளங்கரி, தெண்ணி லெழுபது கோடிநூ றாயிர, மெ
ண்ணிலு நீர்மே லெழுத்தது வாகுமே. (௪)

பரனாய்ப் பராபரங் காட்டி யுலகிற், றரனாய் சிவதன்மந்
தானேசொல் காலத், தரனா யமரர்க ளர்ச்சிக்கு நந்தி, யுரனாகி
யாகம மோங்குகின் றானே. (௫)

சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவ, முவமா மகேச ருரு
த்திர தேவர், தவமால் பிரமீசர் தம்மிற்றாம் பெற்ற, நவவாக
மமெங்க ணந்தி பெற்றானே (௬)

பெற்றநல் லாகமங் காரணங் காமிக, முற்றநல் வீர முயர்

வா தளஞ்சிந் தியம், மற்றவ்வியாமள மாகுங்கா லோத்திரந், துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. (எ)

அண்ண லருளா லருளுஞ் சிவாகமம், மெண்ணிலி கோடி தொகுத்திடு மாயினு, மண்ண லறைந்த வறிவறி யாவிடி, னெண்ணிலி கோடியு நீர்மே லெழுத்தே. (அ)

மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின், றேரியு நின்றங் கிளக்கின்ற காலத்து, வாரிய முந்தமி ழும்முட னேசொல்லிக், காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. (கூ)

அவிழ்க்கின்ற வாறு மதுக்கட்டு மாறுஞ், சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந், தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டு, முணர்த்து மவனை யுணரலு மாமே (க0) ஆக கக.

---

குருபாரம்பரியம்

நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி, னந்திகள் நால்வர் சிவயோக மாமுனி, மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரம, ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே (க)

நந்தி யருளாலே நாதனாம் பேர்பெற்றோம், நந்தி யருளாலே மூலனை நாடினோம், நந்தி யருளாவ தென்செயு நாட்டினில், நந்தி வழிகாட்ட நானிருந் தேனே. (உ)

மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்க, னிந்திரன் சோமன் பிரம னுருத்திரன், கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ, டிந்த வெழுவரு மென்வழி யாமே (௩)

நால்வரு நாலு திசைக்கொன்று நாதர்கள், நால்வரு நானாவி தப்பொருள் கைக்கொண்டு, நால்வரு நான்பெற்ற தெல்லாம் பெறுகென, நால்வருந் தேவராய் நாதரா னார்களே. (௪)

மொழிந்தது மூவர்க்கு நால்வர்க்கு மீச, னொழிந்த பெருமை யிறப்பும் பிறப்புஞ், செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன், கழிந்த பெருமையைக் காட்டகி லானே. (௫)

எழுந்நீர் பெய்யினு மெட்டுத் திசையுஞ், செழுந்த ணிய
செயமென்ன தண்ணல், கொழுந்தன பவளக் குளிர
மேயாடே, யழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. (௬)
ஆக ௭௨

---

## திருமூலர் வரலாறு.

நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு, புந்தியி னுள்ளே
புகப்பெய்து போற்றிசெய், தந்தி மதிபுனை யரனடி நாடொறுஞ்,
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. (௧)
செப்புஞ் சிவாகம மென்னு மப்பேர்பெற்று, மப்படி நல்கு
மருணந்தி தாள்பெற்றுத், தப்பிலா மன்றிற் றனிக்கூத்துக் க
ண்டபின், னொப்பி லெழுபதுகோடி யுகமிருந் தேனே (௨)
இருந்தவக் காரணங் கேளிந் திரனே, பொருந்திய செல்
வப் புவனா பதியை, யருந்தவச் செல்வியைச் சேவித் தடி
யேன் பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. (௩)
சதாசிவந் தத்துவ முத்தமிழ் வேதம், மிதாசனி யாதிருந்
த காலம், மிதாசனி யாதிருந் தேன்மன நீங்கி, யுதாசனி
னோடுணர்ந் தோமால் (௪)
மாலாங்க னேயிங் கியான்வந்த காரணம், நீலாங்க மேனி
நேரிழை யாளொடு, மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்,
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. (௫)
நேரிழை யாவா ணிரதிச யானந்தப், பேருடை யாளென்,
பிறப்பறுத் தாண்டவள், சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. (௬)
சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச், சேர்ந்திருந்
தேன்சிவ னாவடு தண்டுறை, சேர்ந்திருந் தேன்சிவ போதியி னீ
ழற், சேர்ந்திருந் தேன்சிவ னாமங்க ளோதியே (௭)
இருந்தேனிக் காயத்தே யெண்ணிலி கோடி, யிருந்தே னி
ராப்பக லற்ற விடத்தே, யிருந்தே னிமையவ ரேத்தும் பதத்
தே, யிருந்தேனென் னந்தி யிணையடிக் கீழே. (௮)

பின்னைநின றென்னே பிறவி பெறுவது, முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலீர், என்னைநன றாக விறைவன படைத்த னன, றன்னைநன றாகத தமிழ்செய்யு மாறே. (௯)

ஞானத தலைவிதன னநதி நகர்புக்கு, வூனமி லொனபது கோடி யுகநதனுள், ஞானபபா லாட்டி நாதனை யர்சசிதது, யானு மிருநதேனற போதியின கீழே. (௧0)

செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன, வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராயப, பலகின்ற தேவா சுராநரர் தம்பா, லொலகின்ற வானவழி யூடுவந தேனே. (௧௧)

சித்தததி னுளளே சிறக்கின்ற நூல்களி, லுத்தம மாகவே யோதிய வேதத்தி, னொத்த வுடலையு முள்ளநின றுபபதி, யத்த னெனக்கிங் கருளா லளித்ததே (௧௨)

நானபெறற வினபம பெறுகவிவ வையகம், வானபற்றி நின்ற மறைபபொருள சொலலலவு, மூனபற்றி நின்ற வுணர்வுறு மநதிரந, தானபறறப் பற்றத தலைபபடுந தானே (௧௩)

பிறபபிலி நாதனைப போநநதி தனனைச, சிறபபொடு வானவா சென்றுகை கூப்பி, மறபபிலா நெஞ்சினுள மநதிர மாலை யுறைபபொடு கூடிநின றோதலு மாமே (௧௪)

அஙகி மிகாமைவைத தானுடல் வைத்தா, னெங்கு மிகாமைவைத தானுல கேழையுந, தஙகி மிகாமைவைத தானறமிழ் சாததிரம, பொஙகி மிகாமைவைத தானபொரு டானுமே.

அடிமுடி காணபா ரயனமா லிருவர், படிகண டிலர்மீண டும பாரமிசைக கூடி, யடிகண டிலனென றசசுதன சொல்ல முடிகண்ட னெனறயன பொய்மொழிந தானே. (௧௬)

பெற்றமு மானு மழுவும பிரிவறற, தற்பரன கற்பனை யுகுஞ் சராசரத, தற்றமு நஙகி யடியேன சிரததினி, னறபத மும்மளித தானெஙக ணநதியே. (௧௭)

ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை, மாயத்தை மாமாயை தனனில் வரும்பரை, யாயத்தை யசசிவன றனனை யகோ

சர, வியந்தை முற்றும் விளங்கியிட் டேனே. (௧௮)

விளங்கிப் பரமாகு மெய்யருஞானச் சோதி, யளப்பில் பெ
ருமைய ளானந்த நந்தி, துளக்கறு மானந்தக் கூத்தனசொற
போந்து, வளப்பிற கயிலை வழியில்வந் தேனே. (௧௯)

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின், னந்தியருளாலே ச
தாசிவ னாயினே, னந்தி யருளாலேமெய்ஞ் ஞானத்து நண்ணி
னே, னந்தி யருளாலே நானிருந் தேனே. (௨௰)

இருக்கி லிருக்கு மெண்ணிலி கோடி, யருக்கின்ற மூலத்து
ளங்கே யிருக்கு, மருக்கனுஞ் சோமனு மாரழல் வீச, வுருக்கி யு
ரோம மொளிவிடுந் தானே. (௨௧)

பிதற்றுகின் றேனென்றும் பேர்நந்தி தன்னை, யிபற்றுவ
னெஞ்சத் திரவும் பகலு, முயற்றுவ னோங்கொளி வண்ணனெ
ம் மானை, யியற்றிகழ் சோதி யிறைவனு மாமே (௨௨) ஆ-கஉ

---

அவையடக்கம்.

ஆரறி வாரெங்க ளண்ணல் பெருமையை, யாரறி வாரிந்த
வகலமு நீளமும், பேரறி யாத பெருஞ்சுட ரொன்றதின், வேர
றி யாமை விளம்புகின் றேனே. (௧)

பாடவல் லார்நெறி பாட வறிகிலே, னாடவல் லார்நெறி
யாட வறிகிலே, னாடவல் லார்நெறி ஞான மறிகிலேன், றேடவ
ல் லார்நெறி தேடகில் லேனே. (௨)

மன்னிய வாய்மொழி யாலு மதித்தவ, ரின்னிசை யுள்ளோ
யெழுகின்ற வீசனைப், பின்னை யுலகம் படைத்த பிரமனு, முன்னி
யவனை யுணரலு மாமே (௩)

தத்துவ ஞான முரைத்தது தாழ்வரை, முத்திக் கிருந்த மு
னிவருந் தேவரு, மொத்துடன் வேறா யிருந்து துதிசெய்யும, ப
த்திமை யாலிப் பயனறி யாரே. (௪) ஆ-கசு

திருமந்திரத் தொகைச்சிறப்பு

மூல னுரைசெய்த மூவாயிரந் தமிழ், ஞால மறியவே நந்தி
யருளது, காலை யெழுந்து கருத்தறிந் தோதிடின், ஞாலத் தலை
வனை நண்ணுவ ரன்றே. (௧)

வைத்த பரிசே வகைவகை நன்னூலின், முத்தி முடிவிது
மூவா யிரத்திலே, புத்திசெய் பூர்வத்து மூவாயிரம் பொது
வைத்த சிறப்பு தருமிவை தானே. (௨) ஆ கoo.

குரும—வரலாறு

வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின், முந்தி யுதிக்
கின்ற மூலன் மடவரை, தந்திர மொன்பது சார்வுமூ வாயிரஞ்
சுந்தர வாகமச் சொன்மொழிந் தானே. (௧)

கலந்தருள் காலாங்கர் தம்பாற் கோரர், நலந்தரு மன்னி
ய தேவர்நா தாந்தர், புலங்கொள் பரமா னந்தர் போகதேவர்,
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே (௨) ஆ க0உ.

திரிமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறைமை

அளவி லிளமையு மந்தமு மீறு, மளவியல் காலமு நாளு
முனிவற, நாலில்லாச் சங்கரன் றன்னடி யார்சொல், லளவில்
பெருமை யரியயற் காமே. (௧)

ஆதிப் பிரானு மணிமணி வண்ணனு, மாதிக் கமலத்து மலர்
மிசை யயனுஞ், சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியி லொன்
றென்றோரா, பேதித் துலகம் பிணங்குகின் றார்களே (௨)

ஈச னிருக்கு மிருவினைக் கப்புறம், பீச முலகிற் பெருந்தெ
ய்வ மானது, வீச னதுவிது வென்பார் நினைப்பிலார், தூசு பி
டித்தவர் தூரறிந் தாரகளே (௩)

சிவமுதல் மூவரோ டைவர் சிறந்த, வவைமுத லாறிரண்
டொன்றொடொன் றானது, மவைமுதல் விந்துவு நாதமு மோங்க
ச், சவைமுதற் சங்கரன் றன்பெயர் தாமே. (௪)

பயனறிந் தவவழி யெண்ணு மளவி,லயனொடு மானமக க
னனிய மிலலை, நயனஙகள மூனறுடை நந்தித தமராம், வயன
பெறு வீரவ வானவ ராலே. (௫)

ஒலககளு சூழந்த வுலப்பிலி தேவர்கள்,பாலொத்த மேனி
ப் பணிந்தடி யேனறொழு, மாலுக்கு மாதிப பிரமற்கு மொப்பு
ன், ஞாலத்து நமமடி நலகிடென றானே. (௬)

வானவ ரொன்று மனித ரியவரென்றுந,தேனமர் கொன்றை
சசிவனரு ளல்லது, தானமாந் தோருந் தனிததெயவ மறறில
லை, யூனமாந் தோரை யுணாவது தானே. (௭)

சோதித்த பேரொளி மூனறைந் தெனநின்ற, வாதிக்கு
ளாவ தறிகிலா தாக, ணீதிக்க ணீச னெடுமா லடவென்று,
பேதித்தவாப பிதறறுகின றாரோ (௮)

பரத்திலே யொன்று முளளாய்ப் புறமாகி, வரத்தினு ள
மாயவ ருயய ளுகித, தரத்தினு டானபல தனமய ளுக்கி, க
ரத்தினு ளொன்று கழிவுசெய தானே. (௯)

தானொரு கூறு சதாசிவ னெமமிறை, வானொரு கூறு மரு
வியு மஙகுளன, கோனொரு கூறுட லுள்ளின றுயிர்க்கின்ற,
தானொரு கூறு சலமய னாமே (௧௦)

ஆக அதிகாரம் - ௧ - இ - பாடல் - ௧௧௨.
சிறப்புப்பாயிரம் - முற்றும்.

---

## முதற்றந்திரம்.

உபதேசம்

விணணின றிழிந்து வினைக்கீடாய மெய்கொண்டு,தணணி
னற தாளைத தலைககாவல் முனவைதது, வுணணின றுருக்கி
யொ ரொப்பிலா வானநதக, கணணின்று காட்டிக களிம்பறுத
தானே. (௧)

களிம்பறுத தானெங்கள் கணணுதல் நந்தி, களிம்பறுத

ஞானருட் கண்விழிப் பித்தக, ளிம்பனு காத கதிரொளி கா டிட, பனிவகிற பவளம பதித்தான பதியே. (௨)

பதிபசு பாச மெனபபகா மூனதிற், பதியினைப் போறபசு பாச மனாதி, பதியினைச் சென்றணு காப்பசு பாசம், பதியணு கிறபசு பாச நிலாவே. (௩)

வேயி னெழுஙகனல் போலேயிம மேனியுங், கோயி லிருந்து குடிகொண்ட கோனநதி, தாயினு மும்மல மாற்றித தூயவெ ளனூர, தேயம தாயெழுஞ சூரிய னுமே. (௪)

சூரிய காநதமுஞ சூழபஞசும போலவே, சூரிய காநதி சூழபஞசைச சுட்டாச, சூரியன சந்நிதி யிரசுடு மாறு போ, லாரியன றோறறமு னறற மலஙகளே. (௫)

மலஙகளைந தாமென மாறறி யருளித, தலஙகளைந தான ற் சதாசிவ மான, புலஙகளைந தானட பொதுவினு ளநதியே, கலஙகளைந தானு னனபநதா னறிகரே (௬)

அறிவைம புலனுட னேநான தாகி, நெறியறி யாதுற்ற நீ ராழமபோல, வறிவறி வுளளே யழிநதது போலக, குறியறி விப பான குருபர னுமே (௭)

ஆமேவு பாலைப் பிரிசகினற வனனம்போற், றாமே தனிமூன றிற றனனை சுவிநதநத, தீமேவு பலகர ணஙகளு ளுறறன, தா மே பிறபபெரி சோநதவிந தாமே (௮)

வித்தைக கெடுத்து வியாககிரத தேமிகச, சுத்த துரியம பிறநது தடககற்று, வொத்தட் புலனுயி ரொனறுயுடமபொடு, செததிட டிருபபர சிவயோ கியர்களே (௯)

சிவயோக மாவது சித்தசித தனறு, தவயோகத தூடபுக குத தனனொளி தாய, தவபோகஞ சாராத வனபதி போக, க வயோக நநதி தனககளித தானே (௧௦)

அளிததா னுலகெஙகுந தாருண வுணமை, யளித்தா னமர ரறியா வுலக, மளிததான திருமனறு ளாடுந திருததா, ளளித

தான பேரின்பத் தருள்வெளி தானே (கக)

வெளியில் வெளிபோய் விரவிய வாறும், அளியி லளிபோ யடங்கிய வாறும், ஒளியி லொளிபோ யொடுங்கிய வாறுந், தெளியு மவரே சிவசித்தர் தாமே (கஉ)

சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர், சத்தமுஞ் சத்த மனமுந் தழுவினோர், நித்தர் நிமலர் நிராமயர் நீள்பரர், முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே (கங)

முப்பது மாறும் படிமுத்தி யேணியா, யொப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச், செப்ப வரிய சிவங்கண்டு தானெறி ஙிங், தப்பிச் சாக வமரந் திருந்தாரே (கச)

இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி, யிருந்தார் சிவன்செய லியாவையு நோக்கி, யிருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங், கிருந்தா ரிழவுவ தெய்திய சோம்பே (கரு)

சோம்ப ரிருப்பது சுத்த வெளியிலே, சோம்பர் கிடப்பது சுத்த வொளியிலே, சோம்ப ருணர்வு சுருதி முடிந்திடஞ், சோம்பர்கண் டாரச் சுருதிக்கட் டூக்கமே. (கசு)

தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முளே, தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முளே, தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முளே, தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே.

எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை, யவ்வா றருள்செய்வா னாதியா னந்தன், மொவ்வாத மூன்று மொருமைக்கண் வாடுஞ், செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம் (கஅ)

மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய், மாணிக்கத் துள்ளே மரகத மாடமா, யாணிப்பொன் மன்றினி லாடுந் திருக்கூத்தைப், பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரோ. (ககூ)

பெற்றா ருலகிற் பிரியாப் பெருநெறி, பெற்றா ருலகிற் பிறவாப் பெரும்பயன், பெற்றா ரம்மன்றிற் பிரியாப் பெரும்பேறு, பெற்றா ருலகுடன் பேசாப் பெருமையே. (உ0)

பெருமை சிறுமை யறிந்தெம்பிரான்போ, லருமை யெளிமை யறிந் தறிவாரா,ரொருமையுள ளாமைபோ லுள்ளைந் தடக்கி, யிருமையுங் கேட்டிருந் தார்புரை யற்றே (௨௪)

புரையற்ற பாலினு ணெய்கலந் தாற்போற், றிரையற்ற சிந்தைநன் ஞானிய னெனசெப்பு, முரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற், கரையற்ற சோதி கலந்தசத் தாமே. (௨௫)

சத்த முதலைந்துந் தனவழித் தானசாரிற், சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ,சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரு, மத்த மிதுகுறித் தாண்டுகொ ளப்பிலே. (௨௬)

அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையா, லுப்பெனப் பேர்பெற் றுருச்செய்த தவ்வுரு, வப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற், செப்பினிற் சீவன் சிவத்து ளடங்குமே (௨௭)

அடங்குபே ரண்டத் தணுவண்டஞ் சென்றங், கிடங்கொண்ட தில்லை யிதுவன்றி வேறுண்டோ, கடந்தொறு நின்ற வுயிர்கரி காணிற், றிடம்பெற நின்றான் றிருவடி தானே. (௨௮)

திருவடி யேசிவ மாவது தேரிற், றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற், றிருவடியேசெல் கதியது செப்பிற், றிருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே. (௨௯)

தெளிவு குருவின் றிருமேனி காண்டல், தெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல், தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல், தெளிவு குருவுருச் சிந்தித்த றானே. (௩௦)

தானே புலனைந்துந் தன்வச மாயிடுந், தானே புலனைந்துந் தன்வசம் போயிடுந், தானே புலனைந்துந் தன்னில் மடைமாறும், தானே தனித்தெம பிரானறனைச் சந்தித்தே. (௩௧)

சந்திப்பது நந்தி தன்றிருத் தாளிணை, சந்திப்பது நந்தி செய்ய திருமேனி, வந்திப்பது நந்தி நாமமென் வாய்மையாற், புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே. (௩௨)

போதந் தருமெங்கள் புண்ணிய நந்தியைப், போதத்தனில்

கைவிட்டு நாடிக் கருத்தழிந்த தச்சற, செய்யட்டிச் சோறுணுமைவரும போயினூர், மையிட்ட கண்ணுளுரு மாடு மிருக்கவே, மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. (௯)

பந்தற் பிரிந்து பண்டாரங் கட்டற்ற, ஒன்பது வாசலு மொக்க வடைத்தன, துன்புறு காவலர் தூரிசவா மேவமே, லன்புடையாரக ளழுதகன் றாரகளே (௧௦)

நாட்டுக்கு நாயக னம்மூரத் தலைமகன், காட்டுச் சிவிகை யொன்றேறிக் கடைமுறை, நாட்டார்களாப் பின்சொல்ல முன்னே பறைகொட்ட, நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே (௧௧)

முப்பது முப்பது முப்பத் தறுவருஞ், செப்ப மதிலுடைக் கோயிலுள் வாழ்பவர், செப்ப மதிலுடைக் கோயில் சிதைந்தபின், ஒப்ப வனைவரு மோட்டெடுத் தாரே (௧௨)

மதுவூர் குழலியு மாடு மனையு, மிதுவூ ரொழிய விமானமு மேற்ப, பொதுவூர் புறஞ்சுடு காட்டது நோக்கி, மதுவூர் வாங்கி யோவைத் தகன் றாரகளே. (௧௩)

வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள், அச்சக லாமைதன் னாடி மருப்பொருள், விச்சது வாட்டபின் னறடாவுறு மற்றவ, ரெச்சக லாநின்ற திரைக்கின்ற வாறே (௧௪)

ஆக்கை யெழுச்சுற்றும் பெண்டிரு மக்களும், மூர்க்கத்துறை காலே யொழிவா ரொழிந்தபின், வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி, நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே (௧௫)

வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றுங், குளத்தின்மண் கொண்டு குயவன் வனைந்தான், குடமுடைந் தாலவை யோடென் றுவைப்ப, ருடலிறந் தாலிதைப் போதும்மை யாரோ

ஐந்து தலைப்பரி யாறு சடையன, சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப, பந்தலு மொன்பது பந்தி பதினைந்து, வெந்து கிடந்தது மேலறி யோமே (௧௭)

அத்திப் பழமு மறைக்கிரை நீக்கித்தங், குத்தி யுலைப் பெய்து கூழிட்டு வைத்தனர், அத்திப் பழத்தை யறைக்கீரை வி

த்துணைக், கத்தி யெடுத்தவர் காடுபுக் காரே. (௧௮)

மேலு முகட்டில்லை கீழும் வடிம்பில்லை, காலு மிரண்டு மு
கட்டல கொன்றுண்டு, வோலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை,
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே (௧௯)

கூடங் கிடந்தது கோலங்க ளிங்கில்லை, யாடு மிலையமு ம
ற்ற தறுதலா ர, பாடுகின்றார் சிலர் பன்னி யழுதிட்டுத், தேடி
வே தீயினிற் றீட்டவைத் தார்களே. (௨௦)

முட்டை பிறந்தது முந்நூறு நாளினில், விட்டது தானிலை
யேதொன்று மேழைகாள், பட்டது பார்மணம் பன்னிரண் டாண
டின்றி, கெட்ட தெழுபதிற் கேட்டறி யீரே (௨௧)

இடிஞ்சி லிருக்க விளக்கெரி கொண்டான், முடிஞ்ச தறி
யார முழங்குவர் மூடர், விடிஞ்சிரு ளாவ தறியா வுலகம், படி
ஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே (௨௨)

மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த, வுடலு முயி
ரு முருவந் தொடராம, விடர்படாக் கேழு நரகிற் கிடப்ப, கு
டர்பட வெந்தமர் கூப்பிடு மாறே (௨௩)

குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண், டிடையு
மங் கால மிருந்து நடுவே யுடையு மணிந்தறை போகும் போது,
அடையு மிடம்வல மாறுயி ராமே. (௨௪)

காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென், பாற்றுளி
பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென், தோற்பையு ணின்று தொ
ழிலறச் செய்தூட்டுங், கூத்தன் புறப்பட்டுப் போனவிக் கூட்
டையே (௨௫)

அ. ௪

---

செல்வ நிலையாமை

அருளு மரசரு மானையுந் தேரும், பொருளும் பிறர்கொள
வப் போவதன் முன்னம், தெருளு முயிரொடுஞ் செல்வனைச்
சேரின், மருளும் பினையவன் மாதவ மன்றே. (௧)

ஆண்டு பலவுங் கழிந்தன வப்பனைப், பூண்டுகொண் டாரும் புகுந்தறி வாரில்லை, நீண்டன காலங்க ணீண்டு கொடுக்கினுந், தூண்டு விளக்கின் சுடரறி யார்களே. (௨)

தேய்ந்தற் றொழிந்த விளமை கடைமுறை, யாய்ந்தற்ற பின்னை யரிய கருமங்கள், பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை, யோர்ந்தற்றுக் கொள்ளு முயிருள்ள போதே. (௩)

விருப்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர், கரும்பு தகர்த்துக் கடைகொண்ட நீர்போ, லரும்பொத்த மென்முலை யாயிழை யார்க்குக், கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே.

பாலன் விளையன் விருத்த னெனநின்ற, காலங் கழிவன கண்டு மறிகிலார், ஞாலங் கடந்தண்ட மூடறுத் தானடி, மேலுங் கிடந்து விரும்புவ னானே. (௫)

காலை யெழுந்தயா நித்தலு நித்தலு, மாலை படுவது மவாளூட கழிவதுஞ், சாலுமவ் வீசன் சலவிய னாகிலு, மேலை வினைப் பயவாக் கினபஞ்செய் தானே. (௬)

பருவூசி யைந்துமோர் பையினுள் வாழும், பருவூசி யைந்து பறக்கும் விருத்தம், பருவூசி யைந்தும் பணித்தலைப் பட்டாற், பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. (௭)

கண்ணனுங் காய்கதி ரோனு முலகினைப், புண்ணின் றுணக்கின்ற தொன்று மறிகிலார், விண்ணுறு வாரையும் வினையுறு வாரையு, மெண்ணுறு முப்பதி லீர்ந்தொழிந் தாரே. (௮)

ஒன்றிய வீரெண் கலையு முடனுறை, நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள், கன்றிய காலன் கருக்குழி வைத்தபின், சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. (௯)

எய்திய நாளி லிளமை கழியாமை, யெய்திய நாளி லிசைவினா லேத்துமி, னெய்திய நாளி லெறிவ தறியாம, லெய்திய நாளி லிருந்துகண் டேனே. (௰) ஆக கஅக.

## உயிர் நிலையாமை.

தழைக்கின்ற செந்தளிர்த் தன்மலர்க் கொம்பில், விழைக்கின்ற தெல்லா மிறக்கின்ற கண்டும், பிழைப்பின்றி யெம்பெரு மானடி யேத்தா, ரழைக்கின்ற போதறி யாரவர் தாமே (௧)

ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது, வைவரு மச்செய்யைக் காத்து வருவர்க, ளைவர்க்கு நாயக னோலை வருதலா, லைவரு மச்செய்யைக் காவல்விட் டாரே (௨)

மத்தளி யொன்றுள தாள மிரண்டுள, வத்துளே வாழு மரசரு மஞ்சுள, வத்துளே வாழு மரசன் புறப்பட்டான், மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. (௩)

வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை, வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை, வேங்கட மென்றே விரகறி யாதவர், தாங்கவல் லாருயிர் தாமறி யாரே (௪)

சென்றுணர் வான்றிசை பத்துந் திவாகர, னன்றுணர் வாலளக் கின்ற தறிகிலார், நின்றுணர் வாரிந் நிலத்தின் மனிதர்க, ளொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே (௫)

மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை, பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரில்லை, கூறுங் கருமயிர் வெண்மயி ராவது மீறும் பிறப்புமொ ராண்டெனு நீரே (௬)

துடுப்பிடு பானைக்கு மொன்றே யரிசி, யடுப்பிடு மூன்றிரண் டுலைசேர் கொள்ளி, யடுத்தெரி யாமற் கொடுமின் னரிசி, விடுத்தன நாட்களு மேற்சென் றனவே. (௭)

இன்புறு வண்டிங் கினமலர் மேற்போ, யுண்பது வாசம துபோ லுயிர்நிலை, யின்புற நாடி நினைக்கிலு மொன்றொளி, துன்புற நின்ற கருத்துணில் லானே. (௮)

ஆம்விதி நாடி யறஞ்செய்ம்மி னந்நிலம், போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின், நாம்விதி வேண்டுமென் றெனச்சொல்லின மாநுட, ராம்விதி பெற்ற வருமைவல் லார்க்கே. (௯)

அவ்வியம் பேசி யறங்கெட நில்லன்மின், வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின், செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு, தவ்விக்கொ டுண்மின் றலைப்பட்ட போதே (௯)
ஆ. ௧௯௬

---

கொல்லாமை

பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர், மற்றோ ரணுக்களைக் கொல்லாமை யொண்மலர், நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமு, முற்றாரு மாவி யமர்ந்திட முச்சியே. (௧)

கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை, வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச், செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை, நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே (௨) ஆ. ௧௯௮.

---

புலால் மறுத்தல்

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை, யெல்லாருங் காண வியமன்றன் றூதுவர், செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தின், மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. (௧)

கொலையே களவுகட் காமம்பொய் கூறல், மலைவான பாதக மாமவை நீக்கித், தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க், கிலையா மிவைஞான னந்தத் திருத்தலே. (௨) ஆ. ௨௦௦

---

பிறன்மனை நயவாமை

ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே, காத்த மனையாளைக் காமுறுங் காளையர், காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல், ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே (௧)

தரித்து வளர்த்ததோர் தேமாங் கனியை, யருத்தமென் றெண்ணி யறையிற் புதைத்துப், பொருத்த மிலாத புளிமாங் கொம்பேறிக், கருத்தறி யாதவர் காலற்ற வாறே (௨)

பொருள்கொண்ட கண்டனும் போதகை யாரு, மிருள்

பெருஞ்செல்வங் கெட்டென்று முன்னே படைத்த, வருஞ்
செல்வந் தந்த தலைவனை நாடு, வருஞ்செல்வத் தின்பம் வரவி
ருந் தெண்ணி, யருஞ்செல்வத் தாருந்தி வெட்கநின் றாரோ (௭)
ஒக்கட ராளை புலப்பிலி நாதனை, யொண்கட ராகியென
னுள்ளத் திருக்கின்ற, கண்கட ரோனுல கேழுங் கடந்தவ, த
னைக்கட ரோமத் தலைவனு மாமே. (௮)
ஓமத்து ளங்கியி னுள்ளூரா னெம்மிறை, யீமத்து ளங்கி யி
ரதங்கொள வானுளன, வேமத்து ளங்கி விளைவு வினைக்கடற்,
கோமத்து ளங்கி குரைகட றீனே (௯)
அங்கி நிறுத்து மருந்தவ ராரணைத், தங்கி யிருக்கும் வகை
யருள் செய்தவ, னெங்கு நிறுத்தி யிளைப்பய பெருமபதி, பொங்
கி நிறுத்தும் புகழுது மாமே (௧௦) ஆ. உ௨௩.

அந்தணரொழுக்கம்

அந்தண ராவோ ரறுதொழில் பூண்டுளோர், செந்தழ
லோம்பி முப்போது நியமஞ்செய், தந்தவ நற்கரு மத்து நின் று
நங்கிட்டுச், சந்தியு மோதிச் சடங்கறுப் போர்களே (௧)
வேதாந்தங் கேட்க விரும்பொடு முப்பதப், போதாந்த
மான பிரணவத் துள்புக்கு, நாதாந்த வேதாந்த போதாந்த
நாதனை, யீதா மேனுகண் டின்புறு வோர்களே. (௨)
காயத் திரியே கருத்துச் சாவித்திரி, யாய்தற குணப்பா மந்
திர மாவுன்னி, நேயத்தே ரேறி நினைவுற்று நேயத்தாய், மா
டத்துட் டோயா மறையோர்க டாமே. (௩)
பெருநெறி யான் பிரணவ மோர்ந்து, குருநெறி யாலுரை
கூடிநல் வேதத், திருநெறி யான கிரியை யிருந்திச், சொரூப
ம தானோர் துகளில்பார்ப் பாரே. (௪)
சத்திய முந்தவந் தானவ னாதலு, மெய்த்தகு மிந்திரிய மீ
ட்டியே வாட்டலு, மொத்த வுயிருட னுண்டா புணர்வுற்றப்,
பெத்த மறுத்தலு மாகும் பிரமமே. (௫)

வேதாந்தங் கேட்ட விரும்பிய வேதியர், வேதாந்தங் கே
ட்டுந்தம வேட்கை யொழிந்திலர், வேதாந்த மாவது வேட்கை
யொழிந்திடம், வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே

நூலுஞ் சிகையு நுவலிற பிரமமோ, நூலது காறபாச நு
ண்சிகை கேசமாம், நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம,
நூலுடை யந்தணர் காணு நுவலிலே. (௭)

சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி, பொத்த விடை
யமவிட டோரு முணர்வின்றிப், பத்தியு மின்றிப் பரனுண்மை
யின்றிப் பூணூ, பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே (௮)

திருநெறி யாகிய சித்தசித் தின்றிக், குருநெறி யாலே கு
ருபதஞ் சேர்ந்து, கரும வியமாதி கைவிடுகை காணுந், துரிய
சமாதியாக தூய்மறை யோர்க்கே (௯)

மறையோ ரவரே மறையவ ராறும், மறைமேயார்தம் வே
தாந்த வாய்மையிற் றூய்மை, குறையோ தல மறறுளன கோ
லாகலமென, றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே (௧௦)

அந்தணமை பூண்ட வருமறை யந்தத்துச், சிந்தைசெய ய
ந்தணர் சேருஞ் செழும்புவி, நந்தா விம்லை நரபதி நன்றுகு,
மந்திரு சத்திய மாகுதி பண்ணுமே (௧௧)

வேதாந்த ஞானம் விளங்கி விதிமேலோர், நாதாந்த போ
தனுஞ்சிய போகத்துப், போதாந்த மாம்பரன பாற்புகய புக்க
தால், நாதாந்த முத்தியுஞ் சித்தியு நண்ணுமே (௧௨)

ஒன்று மிரண்டு மொடுங்கிய காலத்து, நன்று மிருந்து நல
மபல பேசினுட, வென்று விளங்கும் விகிர்தனை நாடியோர், சென
று வணங்குந் திருவுடை யோரே (௧௩)

தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட, நானே விடைப்பட்டு
மேதானை நாடாது, பூமேவு நான்முகன புண்ணிய போக
னு, மோமேவு மோமா குதியவி புணபவே. (௧௪) ஆ. ௨௯௭.

## இராசதோடம்.

கல்லா வரசனுங் காலனு நேரொப்பர், கல்லா வரசனிற் காலன் மிகநல்லன், கல்லா வரச னறமோரான் கொல்லென்பான், நல்லாரைக் காலனணுககி லானே. (௧)

நாடோறு மன்னவ னாட்டிற் றவநெறி, நாடோறு நாடி யவனெறி நாடானேல், நாடோறு நாடு கெடுமூட னண்ணும், நாடோறுஞ் செல்வ நரபதி குன்றுமே (௨)

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன், வேட நெறிநிற்போர் வேடமெய் வேடம், வேட நெறிநில்லாத் தம்மை யிறையவன், வேடநெறி செய்தால் வீடது வாகுமே ()

மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொளின், வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும், பீடொன் றிலவாகு மாதலாற் போதந்தனாக, ஆடம்பர நூற் சிகையறுத் தாலன்றே (௪)

ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை, ஞானிகள் போல நடிக்கின்ற வர்தம்மை, ஞானிக ளாலே நரபதி சோதித்து, ஞான முண்டாக்குத லாநெறி நாட்டிற்கே. (௫)

ஆவையும் பாவையு மற்றற வோரையுந், தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங், காவலன் காப்பவன் காவா தொழிவனேல், மேலு மறுமைக்கு மீளா நரகமே. (௬)

திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின், மறந்து மறநெறி யோசற்றால் வேண்டுஞ், சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையு, மறைந்திடின் வேந்தனுக் காறிலொன் றாமே (எ)

வேந்த னுலகை மிகநன்று காப்பது, வாய்ந்த மனிதர்க ளவ்வழி யாகிற்பர், பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொளார், பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. (அ)

கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப், பால்கொண்டு சோமன முகம்பற்றி யுண்ணாதோர், மால்கொண்டு தேறல் யுண்ணு மருளரை, மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே. (௯).

தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை, யத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி, யெத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே, மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. (௧0)

ஆ ௨௪௩.

---

வானச்சிறப்பு.

அமுதூறு மாமழை நீரத னாலே, யமுதூறும் பன்மரம் பார்மிசைத் தோற்றுங், கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை, யமுதூறு காஞ்சிரை யாங்கது வாமே (௧)

வரையிடை நின்றிழி வானீ ரருவி, யுரையில்லை யுள்ளத் தகத்தினி லூறு, நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க், கரையில்லை யெந்தை கழுமணி யாறே (௨) ஆ ௨௪௫.

---

தானச்சிறப்பு

ஆர்க்கு மிடுமி னவரிவ ரென்னன்மின், பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின், வேட்கை யுடையீர் விரைந்தொல்லை யுண்ணன்மின், காக்கை கரைந்துண்ணுங் காலம றிமினே (௧) ஆ ௨௪௬.

---

இகதாரக்கிதம்.

தாமறி வாரண்ணல் றாள்பணி வாரவர், தாமறி வாரறந் தாங்கினின் றாரவர், தாமறி வார்சில தத்துவ ராவர்கள், டாமறி வார்க்குத் தமர்பர னாமே (௧)

யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை, யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை, யாவர்க்கு மாமுண்ணும் போதொரு கைப்பிடி, யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே. (௨)

அற்றுநின் றாருண்ணு மூணே யறனென்னுங், கற்றன போதங் கமழ்பவர் மானுட, குற்றநின் றாரொரு கூவற் குளத்தினிற், பற்றிவத் துண்ணும் பயனறி யாரே. (௩)

இருமலுஞ் சோகையு மீளையும் வெப்புந், தருமஞ் செய்யா தவர்தம்பால தாகு, முருமிடி நாக முரோணி கழலை, தருமஞ் செய்வார்பக்கந் தாழ்கி லாவே (௪)

பரவப் படுவான் பரமனை யேத்தா, ரிரவலர்க் கீதலை யாயி னும்பரா, காசநிற்கே கீராட்டுங் காவை வளர்க்கா, நரகத்தி னிற்றிரோ நன்னெஞ்சி னீரே. (௫)

வழிநடப் பாரின்றி வானோ ருலகங், கழிநடப் பார்நடப் பாரு, மழிநடக் குமவினை மாற வோட்டிட், டொழிநடப் பார்வினை யோங்கிநின் றாரே. (௬)

அவிழ்ந்தவ ரீசனைக் கழலடி காணடா, தவிழ்ந்தவ ரீசனை நற்ககந் தானவா, மலிந்தவர் மாளுந் துணையென தின்றி, மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே (௭)

இன்ப மிடரென் றிரண்டுற வைத்தது, முன்பவர் செய்கையி னாலே முடிந்தது, வின்பத்துக் கண்டு மிகிலாப் பேதைகள், அன்பிலார் சிந்தை யறமறி யாரே (௮)

கெடுவது மாவது கேடில் புகழோ, னடுவல்ல செய்தின் பாட்டவொட்டார், விடுவது மேவது மெண்ணுமின் விண்பய, படுவது செய்யிற் பசுவது வாமே (௯)

செல்வங் கருதிச் சிவாயலர் வாழ்வென்று, புல்லறி வாளைப் போற்றிப் புலர்வார்கள், இல்லங் கருதி யிறைவனை யேத்து, மின்னறிவில்லற வெய்த விற்குறி யாமே. (௰) ஆ. உ௬௧

---

அன்புடைமை

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா, ரன்பே சிவமாவ தாரு மறிகிலா, ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி, னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. (௧)

பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன், மின்னிக் கிடந்து மிளிரு மிளம்பிறை, துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக், குப், பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. (௨)

இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன், றுன்பப் பிறவி
த் தொழில்பல வென்னினும், அன்பிற் கலவுசெய் தாதிப் பிரா
னவைத்த, முன்பப் பிறவி முடிவது தானே. (௨)

அன்புறு சிந்தையி னேயொழு மவ்வொளி, யின்புறு கன
னியோ டேற விசைத்தனன், துன்புறு கண்ணிமைய தாடொந் தட
கறு, நன்புறு சிந்தையை நாடுமி னீரே (௩)

புணர்ச்சியு ளாயிழை மேலன்பு போல, வுணர்ச்சியு ளாங்
கே யொடுங்கவல் லார்க்கு, குணர்ச்சி யில்லாது குலாவி யுலா
வி, யணைத்தலு மின்ப மதுவிது வாமே (௪)

உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச், சித்தர்க ளென்
றுந் தெரிந்தறி வாரில்லை, பத்திமை யாலே பணிந்தடி யார்
தொழ, முத்தி கொடுத்தவா முன்புநின் றானே. (௫)

கண்டேன் கமழ்தரு கொன்றையி னானடி, கண்டேன் க
ரியுரி யான்றன் கழலிணை, கண்டேன் கமல மலருறை வானடி,
கண்டேன் கழலதெ னன்பினு ளானே. (௬)

நம்பனை நாளு விதப்பொரு ளாகுமென, றும்பரி லவா
னவரோடு தலைவனை, யின்பனை யின்பத் திடைநின் றிரதிக்கு,
முன்பனை யாரு மறியகி லாரே. (௭)

முன்பு பிறப்பு மிறப்பு மறியாதா, ரன்பி லிறைவனை யாமா
தி யோமென்ப, ரின்பப் பிறப்பு மிறப்பு மிலாததி, யன்பி ல
வனை யறியகி லாரே. (௮)

ஈச னறியு மிராப்பக லுந்தன்னைப், பாசத்துள் வைத்து
ப் பரிவுசெய் வார்களைத், தேசுற் றறிந்து செயலற நிருத்தி,
யீசனவ் தெமயிடை யீட்டிநின் றானே. (௯)

விட்டுப் பிடிப்பதென் மேதரு சோதியைத், தொட்டுத்
தொடர்வன் றலையாப் பெருமையை, யெட்டுமென் றுருயிரா
ய்நின்ற வீசனை, மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. (௧௦)

ஆ. உ௩௪.

---

## கல்வி.

குறிப்பறிந் தேனுட லுயிரது கூடிச், செறிப்பறிந் தேன்
மிகு தேவர் பிரானை, மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான,
கறிப்பறி யாமிகு கல்விகற் றேனே. (௧)

கற்றறி வாளர் கருதிய காலத்துக்,கற்றறி வாளர் கருத்தி
லோர் கணுண்டு, கற்றறி வாளர் கருதி யுரைசெய்யுங், கற்ற
றி காட்டக கயலுள வாக்குமே. (௨)

நிற்கின்ற போதே நிலையுடை யான்கழற், கற்கின்ற செய்
யின் கழிந்தறும் பாவங்கள், சொற்குன்ற லின்றித் தொழுமி
ன் றொழுதபின, மற்றொன் றிலாத மணிவிளக் காமே (௩)

கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்,பல்லி யுடை
யார் பாம்பரிந் துண்கின்றார், செல்வியுங் காலையு மேத்து மிறை
வனை, வல்லியுள வாகிநிற் காயமு மாமே. (௪)

துணையது வாய்வருந் தூயநற் சோதி,துணையது வாய்வரு
ந் தூயநற் சொல்லாந், துணையது வாய்வருந் தூயமலர் கந்த
ங், துணையது வாய்வருந் தூயநற் கல்வியே. (௫)

நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார், பாலொன
று பற்றினாற் பண்பின பயன்கெடுங், கோலொன்று பற்றினாற்
கூடாப பறவைகள்,மாலொன்று பற்றி மயங்குகின றாரே (௬)

ஆய்ந்துகொள் வார்க்கர னங்கே யெளிப்படுந், தோய்ந்த
நெருப்பது தூயமணி சிந்திடு, மேய்ந்த விளமதி யெட்டவல்
லாகத்து, வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. (௭)

வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன,கழித்துணையா
ங்கற் றிலாதவர் சிந்தை, பொழித்துணை யாமும்பா ராமுலகே
மும், வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே. (௮)

பற்றது பற்றிப் பரமனைப் பற்றுமின, முற்றது வல்லா
முதல்வ னருள்பெறில், கிற்ற விரகிற் கிளரொளி வானவர், கற்
றவர் பேரின்ப முற்றுநின் றாரே. (௯)

கடலிடை யானமலை யானைந்து பூதத், துடலிடை யான்பல வூழிதொ றூழி, யடல்விடை யேறு மமரர்க ணாத, விடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. (௧0) ஆ. ௨௧௧.

---

கேள்விகேட்டமைதல்

அறங்கேட்டு மந்தணை ராய்மொழி கேட்டு, மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும், புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம மீசன, திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே (௧)

தேவர் பிரானறனைத் திவ்விய மூர்த்தியை, யாவ ரொருவ ரறியா ரறிந்தபின், ஓதுமின் கேண்மி னுணர்மி னுணர்ந்தபி, னோதி யுணர்ந்தவ ரோங்கிநின் றாரே (௨)

மயன்பணி கேட்பது மாநந்தி கேட்பி, னயன்பணி கேட்ப தரன்பணி யாலே, சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர், பயன்பணி கேட்பது பற்றது வாமே. (௩)

பெருமா னியல்பென்று பேசி யிருக்குந், திருமா னுடர்பின்னைத் தேவரு மாவ, ரருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யு, மருமா தவத்தெங்க ளாதிப் பிரானே (௪)

ஈச னருளு மிறப்பும் புறப்பையும், பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தி, நேசமு மாகு நிகழொளி யாயநின்று, வாச மலர்க்கந்த மன்னிநின் றானே (௫)

விழுப்பங் கெழுமிய மெய்நின்ற ஞானத், தொழுக்கமு ணிக்கை யுணர்கின்ற போது, வழுக்கி விடாவிடில் வானவர் கோனு, மிழுக்கின்றி யெண்ணிலி காலம தாமே. (௬)

சிறியா ரணற்சோற்றிற் றேக்கிடு மாபோற், செறிவா லனுபோகஞ் சித்திக்கு மென்னிற், குறியாக தொன்றைக் குறியா தார தமமை, யறியா திருந்தா ரவரவ ரன்றே. (௭)

உறுதுணை யாவ துயிரு முடம்பு, முறுதுணை யாவ துலகு

று கேள்வி, செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை, பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே. (௮)

புகழநின் றார்க்கும் புராணனெம் மீச, னிகழநின் றார்க்கு மிடும்பைகள் கிட்டா, மகிழநின் றாதியை யோதி யுணரார்க்குக், கழிய நின் றார்க்கொரு கற்பசு வாமே. (௯)

வைத்துணர்ந் தானமனத் தோம்பிவாய் பேசி, யொத்துணர்ந் தானுரு வொன்றொடொன் றொவ்வா, தச்சுழன் றாணி கலங்கினு மாதியை, நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. (௰)

ஆ ௩௰௪.

---

கல்லாமை

கல்லா தவருங் கருத்தறி காட்சியை, வல்லா ரெனிலருட் கண்ணான மதித்துளோர், கல்லாதா ருண்மைபற் றுநிற்பர் க ரேருங், கல்லாதார் பேரின்பங் காணுகி லாரே. (௧)

வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்று, நல்லாத வர்க ளறிவு பலவென்பர், றெல்லா விடத்து முளனெங்க ளெம் மிறை, கல்லா தவர்கள் கலப்பறி யாரே. (௨)

நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து, நில்லாக் குரம்பை நிலையென் றுணர்கிலர், எல்லா வுயிர்க்கு மிறைவனே யாயினு, கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. (௩)

கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன், கல்லேன ரனெறி யறியாத் தகைமையின், வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுட், கல்லேன் கழிபரின் றுடலக் லேனே. (௪)

நில்லாது சீவ னிலையன் றெனவெண்ணி, வல்லா ரறத்துந் தவத்துளு மாயினார், கல்லா மனிதர் கயவ ருலகினிற், பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. (௫)

விண்ணினி னுள்ளே விளைந்த விளங்கனி, கண்ணினி னுள்ளே கலந்தங் கிருந்தது, மண்ணினி னுள்ளே மதித்த மதித்தி

ட்டிடை யுற்றிட்டு, வும்முத லாகவே யுண்பவ ருச்சிமே, லும
முத லாயவ னாரறிந் தானே (௮௩)

நின்ற வரசம் பலகைமே னேராக, வொன்றிட மவ்விட்டு
வோலையிற் சாத்திட, வென்று மெழுத்தையுள் பூசச் சுடரிடைத்,
தன்ற வெழுத்தப்பிடத் தம்பனங் காணுமே (௮௪)

கரண விரலிப் பலகை யமன்றிசை, மரணமிட் டெட்டி
ன மகார வெழுத்திட்டு, வரணமி லிங்காயம் பூசி யடுப்பிடை,
முரணுற புதைத்திட மோகன மாகுமே. (௮௫)

ஆங்கு யடமேற்கி லேயருள் கோட்டத்திற், பாங்கு பட
வே பலாசம் பலகையிற், சாந்தரு மோட்டுற கப்பூசி விந்து
விட, வோங்காரம் வைத்திடு முச்சாடனந் தகக்க (௮௬)

உச்சியம் போதி லொளிவன்னி மூலையிற், பச்சோலை யிரப
ருச காயத்தைப் பாரித்து, முச்சிறுத்தின முதாட்டில வை
த்திடு, வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே (௮௭)

ஏயந்த வரிதார மேட்டின்மே லேபூசி, யேயந்த வகார மு
கார மெழுதிட்டு, வாயந்த கோர விலவம் பலகை வசியத்துக்க,
மேய்ந்தவைத் தெப்பதி னாயிரம் வேண்டிலே (௮௮)

எண்ணுக் கருட்டின் மேட்டின யகாரமிட், டெண்ணுப
பொன்னுளி வெழுவெள்ளி பூசிடா, வென்னுவறப் பலகை யிட
டுமேற் கேநோக்கி, யெண்ணு வெழுத்தொ டெண்ணாயிரம் வே
ண்டிலே (௮௯)

---

### ஆர்ச்சனை.

அம்புய நீலங் கழுநீ ரணி நெய்தல், வம்பவிழ் பூகமு மாத
வி மந்தாரந், தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை, செண்பக
ம பாதிரி செவ்வந்தி சாத்திடே. (௯0)

சாங்கம தாகவே சந்தொடு சந்தனங், கோங்கமழ் குங்கு மங்கற்பூரங் காரகிற, பாங்குபடப்பனி நீராற் குழைத்துவை த், தாங்கே யணிந்துநீ ராசறியு மன்போடே (௧௧)

அன்புட னேநின் றமுதமு மேற்றியே, பொன்செய் விள க்கும்புகைதீபந் திசைதொறுந், துன்ப மகற்றித் தொழுவோர் நினையுங்கா, லின்ப முடனேவந் தெய்திடு முத்தியே (௧௨)

எய்தி வழிபடி லெய்தா தனவில்லை யெய்தி வழிபடி லிந்திரன் செல்வமுன், னெய்தி வழிபடி லெண்சித்தி யுண்டா கு, மெய்தி வழிபடி லெய்திடு முத்தியே (௧௩)

நண்ணும் பிறதார நீக்கதா ரவிந்நா, மண்ணிய மைவேயத் தியமறு சந்தான, நண்ணிய பஞ்சாங்க நண்ணு நஞ்ஜமென்று, பண்ணு மனபவ னத்தொடு வைகுமே (௧௪)

வேண்டார்கள் கன்ம மிறைவனுக் காட்பட்டோர், வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர், வேண்டார்கள் கன்ம மிகுசிவ போகிகள், வேண்டார்கள் கன்ம மிகுதியோ ராய்ந் தவரே (௧௫)

அறியரு ஞானத் தெவரு மறியார், பொறிவழி தேடிப்புல ம்புகின் றார்கள், ணெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கி, லெறிம ணி யுள்ளே யிருக்கலு மாமே (௧௬)

இருளும வெளிபோ லிரண்டா மிதய, மருளறி யாமையு மன்னு மறிவு, மருளிவை விட்டெறி யாமை மயங்கு, மருளுஞ் சினைந்ததோ ரவர்களா மன்றே (௧௭)

தானவ னாக வவனேதா னாயிட, வானவி ரண்டி லறிவ ன சிவமாக, யோனவ னன்பிற் காலா மரபுநத், தானவ னாகு மோ ராகித்த தேவரே (௧௮)

ஓங்கார முந்திக்கீ முற்றிடு மெந்நாளு, நீங்கா வகாரமு நீள்கண்டத் தாயிடும், பாங்கார் நகாரம் பயினெற்றி யுற்றிடும்

லீங்காரும் விந்துவு நாதமே லாகுமே (௧௧)

நமவது வாசனை மான பசுவே, சிவாது சித்திர சிவமாம பதியே, நமவறவாதி நாவே தனருரு, சிவமாகு மாமோனரு சோதனைபெற வீடே (௧௨)

தெளிவரு நாளிற சிவவமு தூறு, மொளிவரு நாளிலே வாரொட்டி ஒகளு, மொளிவரு மப்பகத தோரிரண் டாசில, வெளிதரு நாதன வெளியா யிருந்தே (௧௩) ஆ ௧௩௧

---

## நவகுண்டம்

நவகுண்ட மானவை நானுரை செய்யி, னவகுண்டத் தானெழு நற்றீபந் தானு, நவகுண்டத் தானெழு நன்மைக ளெல்லா, நவகுண்ட மானவை நானுரைப் பேனே (௧)

உரைத்திடுங் குண்டத்தி னுள்ளே முக்காலு, நரைத்தெழு காற்கோண நன்மைக ளோரு, பரைத்திடு முப்புரம பாரங்கி யோடே, விரைத்திடு கண்டங்கள் மேலறி யோமே. (௨)

மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள், காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர், பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது, நானறிந் துள்ளெழு நாடிக்கொண் டேனே (௩)

கொண்டவிக் குண்டத்தி னுள்ளெழு சோதியா, யண்டங் களேழு மாக்கி யழிக்கலாம, பண்டையுள் வேதம பரந்த பரப்பெலா, மின்றுசொல் லாமெடுத் துரைத் தேனே (௪)

எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற், பதித்த கலைகளும பாவித்து நிற்கும், கதித்தன னுள்ளெழுக் கண்டுகொள் வார்க்கே, கொதித்தெழு வல்வினைக் கூட்டகி லாவே. (௫)

கூட்டமுக் கூட்டத்தி னுள்ளெழு குண்டத்து, ளாடிய வைந்து மகம்புறம் பாய்ந்திடும், பாடிய பன்னீ ரிராசியு மங்கெழு, நாடிக்கொள் வார்க்கு நற்சுடர் தானே. (௬)

நறசுடராகுஞ சிரமுகவட்டமாங், கைசசுடராகுங் கருத்துற்ற கைகளிற, மைசசுடர் மேனி பதைப்புற றிலிஙகமு, நற சுடராயெழு நல்லதென றாரே (எ)

நல்லதென றேநமக்குற்ற நாயகஞ், சொல்லதென றே சுடாமுடிப பாதமா, மெல்லநின றேவினையகிற் றாதவா, கல்லன றேயுய்ய கற்றுமலின றேயே (அ)

வினறு விரமயிறைமேவிய குணடத்துச், சொனறு விரணடு சுடாகாகந நீககெயருமப, பனறுநாகம பரநத பரசுட, னறுகத்துளளோ மிடபகொணட வாறே (கூ)

இடபகொணடோட பாத மெழுசசுட ரேக, நடபகொணட பாதஙகள நனறதகுப, சகநகொணட கையிரண டாறுந தெழுபப, முகநகொணட செஞசுடா முககண ணாகவே (க0)

முககணன றேமுமுச்சுட ராயவ, னககண்ணன றேமங்கலமு முளளவன, நிககண றுசித திகையெட்டினு ககணடவ, னெககணன றுளகு மெநதை பிரானே (கக)

எநதை பிரானுக கிருமூனறு வட்டமாய்த, தநதைதனமுனனே சணமுகந தோனறலாற, கநதன சுவாமி கலநதங கிருநதலால, மைநத விதனனன மாட்டுக கொளீரே. (கஉ)

மாட்டிய குணடத்தி னுளளெழு வேதத்து, ளாட்டிய காலொனறு மிரணடு மாகநிடும, வாட்டிய கையிரண் டொனறு படைத்தெழ, நாட்டுஞ சுரிவா நல்லொளி தானே. (கங)

நல்லொளி யாக நடநத வுலகெங்குங், கல்லொளி யாகக கலநது னிருநதிடுஞ, சொல்லொளி யாகத் தொடர்நத வுயிரெலலாங, கல்லொளி கண்ணுறு மாகிநின றாளே (கச)

நினறவிக குண்ட நிலயாறு கோணமாய்ப, பண்டையில வட்டம படைத்தெழு மாறுறுங், கொண்டவித தததுவ முளளே கலநதெழ, விண்ணுறு மெனன வெடுககலு மாமே. (கரு)

உத்தமன் சோதி யுளவொன்று பாலனாய், மத்திம னாகி மல
ர்ந்தங் கிருந்திடும், பச்சிமத் திக்கும் பரந்த குழியினை, சத்தி
மா னாகத் தழைத்த கொடியே. (௨௫)

கொடியாறு சென்று குலாவிய குண்டம், மடியிரு கோண
மா யெட்டு மொக்குள், படியே ழுலகும் பரந்த சுடரை, மடி
யாது கண்டவர் மாதன மாமே (௨௬)

மாதன மாக வளர்கின்ற வன்னியைச், சாதன மாகச் ச
மைந்த குருவென்றும், போதன மாகப் பொருந்த வுலகாளும்,
பாதன மாகப் பரிந்தது பார்த்தே (௨௭)

பார்த்திட மெங்கும் பரந்தெழு சோதியை, யாத்திட மா
கவே யடையாக் கறிவா ரில்லை, காத்திட வுள்ளே கருதி யிருந்தவர்,
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே (௨௮)

உகங்கண்ட வொன்பது குண்டமு மொக்க, வகங்கண்ட
போசியு னாடி யெழுப்பும், பயங்கண்டு கொண்டவிப் பாய
கருவொப்பச், சகங்கண்டு கொண்டது சாதக மாமே (௨௯)

சாதனை நாலு நழுனாறு வில்வயம், வேதனை வட்டம்
விளையாறு பூநிலை, போதனை போதைந்துச பொறகைய வாரணை,
நாதனை நாடி நவகோடி தானே. (௩௰) ஆக ௧௩௩

---

சத்திபேதம் - திரிபுரைச்சக்கரம்

மாமாயை மாயை வயிந்தவம் வைகரி, யோமாயை யுள்
ளொளி யோராறு கோடியிற், றாமான மந்திரஞ் சத்திதன் மூ
ர்த்திகள், ளாமா யவளாந் திரிபுரை யாங்கே (௧)

திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப், பரிபுரை நாரணி யாம
பல வண்ணத்தி, யிருள்புரை யீசி மனோன்மணி யென்ன, வரு
பல வாய்நிற்கும் மாமாது தானே. (௨)

பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந், தராசத்தி யாய்நி
ன்றனைமை யுணரா, வராசத்தி யூழிகண் டோளு முடனே, பு
ராசத்தி புண்ணிய மாகிய போகமே (௧௨)

போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும், பாகஞ்செய் தா
ங்கே பராசத்தி யாய்நிற்கு, மாகஞ்செய் தாங்கே யடியவர் நா
டொறும், பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. (௧௩)

கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை, வம்பவிழ் கோ
தையை வானவர் நாடியைச், செம்பவ ளத்திரு மேனிச் சிறுமி
யை, நம்பியென் னுள்ளே நயந்துவைத் தேனே (௧௪)

வைத்த பொருளு மருவிய பன்மையும், பத்து முகமு
மபரையும் பராபரைச், சித்தக் கரணச் செயல்களுஞ் செய்தி
ரு, சத்தியும் வித்தைத் தலைப்பய னாமே (௧௫)

தலைவி தடமுலை மேனின்ற தையல், தொலைவிற் றவஞ்செ
ய்யுந் தூய்நெறித் தோகை, கலைபல வென்றிடுங் கன்னியென் னு
ள்ள, நிலைபெற விங்கே நிறைந்துநின் றாளே (௧௬)

நின்றவ ளேரிழை நீள்கலை போதிர, பெண்ணா ணகம்படிந்
தேழுல காதொழு, மன்று மொன்றி மனோன்மணி மங்கலி,
யொன்றென்ன வொன்றிநின் றொத்தடைந் தாளே (௧௭)

ஒத்தடங் குங்கம லத்திடை யாயிழை, யத்தனைச் செய்கி
ன்ற வாய பெரும்பதி, மத்தடை கின்ற மனோன்மணி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ராகமே (௧௮)

உணர்ந்துட லேநிற்கு முள்ளொளி யாகி, மணங்கமழ் பூங்
குழன் மங்கையுந் தானும், புணர்ந்துட னேநிற்கும் போதருங்
காலைக், கணாந்தெழு வார்க்குக் கதிபளிப் பாளே. (௧௯)

அளியொத்த பெண்பிள்ளை யானந்த சுந்தரி, புளியுறு புன்
பழம் போலுள்ள நோக்கித், தெளியுறு சித்துச் சிவகதி காட்டி,

யொளியுற வைத்தென்னை யுய்யக்கொண் டாளே.                 (உ0)

உண்டில்லை யென்றது ருச்செய நின்றது, வண்டில்லை மன்றினு மன்னி நிறைந்தது, கண்டிலர் காரண காரணி தம்மொடு, மண்டல மூன்றுற மன்னிநின் றாளே.                 (உக)

நின்றா ளவன்றன் னுடலு முயிருமாய்ச், சென்றனள் சிவசத்தி சேரு பராசத்தி, யொன்றாக வென்னுட் புகுந்துணர் வாகியே, நின்றாள் பரஞ்சுட ரேடங்கை யாளே                 (உஉ)

ஏடங்கை நங்கை யிறையெங்கள் முக்கண்ணி, வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை, பாடுந் திருமுறை பார்ப்பதி பாதங்கள், சூடுமின் சென்னிவாய்த் தோத்திரஞ் சொல்லுமே

தோத்திரஞ் செய்து தொழுது துணையடி, வாய்த்திட வேத்தி வழிபடு மாறிநூர், பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும், பார்த்திடும் பூமியினை யாகுமா மாதிக்கே                 (உச)

ஆதி விதமிகுத் தண்டச மால்சங்கை, நீதி மலரினே னேரிழை நாமத்தைப், பாதியில் வைத்துப் பலகாற் பயில்வீரே, சோதி மிருத்துமுங் காலமுந் தோன்றுமே                 (உரு)

மேதாதி யீரெட்டு மாகிய மெல்லியல், வேதாதி நூலின் விளங்கும் பராபரை, யாதார மாகியே யாயந்த பரப்பினை, நாதாதி நாதத்து நல்லரு ளாளே                 (உசா)

அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர், பொருள்பெற்ற சிந்தைப் புவனா பதியார், மருளுற்ற சிந்தையை மாற்றி யருளைய, பொருளுற்ற சேவடி போற்றுவ னானே.                 (உஎ)

ஆனவ ராக முகத்தி பதத்தினள், ஈனவ ராக மிடிக்கு முசலத்தோ, டேனைய வேற்படை யேந்திய வெண்ணகை, யூன மறவுணர்ந் தாருளத் தோங்குமே                 (உஅ)

ஓங்காரி யென்பா ளவளொரு பெண்பிள்ளை, நீங்காத பச்

சை நிறத்தை யுடையவ, ளாங்காரி யாகியே யைவரைப் பெற் றிட்டு, ரீங்காரத் துள்ளே யினி திருந் தாளே. (உக)

தானே தலைவி யெனநின்ற தற்பரை, தானே யுயிர்வித்துத் தா ய்த் தந்த பதினாறும், வானோர் தலமு மனமுநற் புத்தியுந், தா னே சிவகதி தன்னை யுமாமே. (௩௦) ஆ. கஙக.

---

## வயிரவிமந்திரம்.

பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி, தன்னி லகாரமு மா தியுங் கூறிட்டுப, பன்னிரண் டாதியோ டந்தப் பதினாறுஞ், சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே. (க

அந்தப் பதினாறு மாகவே வயிரவி, முந்து நடுவு முடிவு மு தலாகச், சிந்தை கலந்தி லெழுகின்ற மாசத்தி, யந்தமு மா, தியு மாகின்ன ருளே (உ)

ஆகின்ற மூவரு மங்கே யடங்குவா, போகின்ற பூதம் பொ ருந்து புராதரா, சாகின்ற சாவுழி சாரார சத்தெறப், போ குந் திரிபுரை புண்ணியத் தோரே (௩)

புண்ணிய நந்தி புனிதன் றிருவாகு, மெண்ணிய நாட் ளிருபத் தேழ் சூழ்மதி, பண்ணிய வன்னி பகலோன் மதியீறு, திண்ணிய சிந்தைதன் றென்னனு மாமே. (௪)

தென்னன் றிருநந்தி சேவகன் றன்னொடும், பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும், பன்னும் பரிபடி யந்தம் பலவே, மின்னுந் திரிபுரை யோதிநின் றுளகே. (௫)

ஓதிய நந்தி யுணருந் திருவரு, ணீதியில் வேத நெறிவந் த ரைசெய்யும், போதந் திருபத் தெழுநாள் புணர்மதி, சோதி யிருதி சூலம்வந் தன்னுமே. (௬)

சூலங் கபாலங்கை யேந்திய சூலிக்கு, நாலாங் கரமுள

காகபா சாங்குச, மாலாங் கயனறி யாத வடிவுக்கு, மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. (௭)

மெல்லியல் வஞ்சி விடமி கலைக்கியானி, சொல்லிய கிஞ்சுக நிறமன்று சேயிழை, கல்லிய லொப்பது காணும் திருமேனி, பல்லிய லாடையும் பன்மணித் தானே. (அ)

பன்மணி சந்திர கோடி திருமுடி, சொன்மணி குண்டலக் காதி யுமைநற் கன்னி, நன்மணி சூரிய சோம நயனத்தள், பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. (௯)

பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேயோர், ரரரிபத் தாளுண்டங் கெண்மர் கன்னியர், பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருஞ், சாரித்துச் சத்தியைத் தாங்களாகண் டாரே. (க0)

கண்டெ சிலம்பு வளைசங்கு சக்கரம், எண்டிசை யோகி யிறைவி பராசத்தி, யண்டமொ டெண்டிசை தாங்கு மருட்செல்வி, புண்டரி கத்துள்ள பூசனை யாளே. (கக)

பூசனை கந்தம் புனைமலர் மாகோடி, யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும், வாச மிலாத மணிமந் திர யோகந், தேசந் திகழுந் திரிபுரை காணே. (கஉ)

காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு, பூணும் பலபல பொன்னைபோலத் தோற்றிடும், பேணுஞ் சிவனும் பிரமனு மாயனுங், காணுந் தலைவிநற் காரணி தானே. (கங)

காரண மந்திர மோதுங் கமலத்துப், பூரண கும்பவி ரேசம் பொருந்திய, நாரணி நந்தி நமவென் குறைசெய்து, காரண வேதத்து லந்தரு மாமே. (க௪)

அந்த [illegible] (க௫)

உறங்கு மளவின் மனோன்மனி வந்து, கறங்கு வளைக்கைக்
கழுத்தார புல்லி, பிறங்கொளித் தம்பலம் வாயி லுமிழ்ந்தி
ட, வுறங்கலை யாவென றுபாயஞ் செய் தாளே (௩௩)

உபாய மளிக்கு மொருத்தியென் னுள்ளத், தபாய மறுக்
கெடுத் தன்பு விளைத்துச், சுவாலை விளக்குஞ் சுழியகத் தா
ளே, யவாலை யடக்கிவைத் தஞ்சலென் றாளே (௩௪)

அஞ்சொன மொழியா ளருந்தவப் பெண்பிள்ளை, செஞ்சொ
ன மடமொழி சீருடைச் சேயிழை, தஞ்சமென றெண்ணித்த
ன சேவடி போற்றுவார்க், கிஞ்சொ லளிக்கு மிறைவியென
றாரே (௩௫)

அருமி ராயு மருந்தவப் பெண்பிள்ளை, காரியல்கோதையள்
காரணி காரணி, யூரு முயிரு முலகு மொடுங்கிடுங், கோரியென
னுள்ளங் குலாவிநின் றாளே. (௩௬)

குலாவிய கோலக் குமரியென் னுள்ள, நிலாவி யிருந்து
நெடுநா ளிணைந்து, முலாவி யிருந்தனள் தூய்சிமி லுள்ளே, க
லாவி யிருந்த கலைத்தலை யாளே. (௩௭)

கலைத்தலை நெற்றியோ ராகணணுடைக் கன்னுள், முலைத்
தலை மங்கை முயங்கி யிருக்கும், சிலைத்தலை யாய தெரிவினை
நோக்கி, யலைத்தபூங் கொம்பின னங்கிருந் தாளே. (௩௮)

இருந்தன ளேந்திழை யென்னுள்ள மேவிப், பொருந்திரு
நால்விரல் புக்கனள் புங்கித், திருந்திய தாணுவில் சேர்ந்துட
னொன்றி, யருந்தவ மெய்தின ளாதியி னாளே. (௩௯)

ஆதி யநாதி யகாரணி காரணி, சோதி யசோதி சுகம்பர
கைதரி, மாது சமாதி மனோன்மணி மங்கலி, யோதியென னு
ளத்து டனியைந் தாளே. (௪௰)

இடைந்தன ளேந்திழை யென்னுள மேவி, யமைந்தன ளங்
கேகமசிவ மென்னும், பன்றனை யோரும்பதமது பற்றும்,

பெயர்க்கனள் மற்றும் பிதற்றறுத் தாளே. (௪௧)

பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர், முயற்றியின் முத்தி யருளு முதல்வி, கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய், முகத்தரு ணோக்கமு முன்னுள தாமே. (௪௨)

உள்ள திதயத் தெஞ்சத் தொருமூன்றுள், பிள்ளைத் தடமுளை பேசப் பிறந்தது, வள்ளத் திருவினை 'வயத்திலுண மா மாயக, கள்ள வொளியின கருத்தாகுங் கனவிலே. (௪௩)

கனவியுங் கனவி யழிந்திலள் காதலி, துனவியங் கைவ ரைப் பெற்றன டேய்மொழி, பனவிய நனனுற பகவரு மங்குள, வெனவனவிம் மாயை யிருளது தானே (௪௪)

இருளது சத்தி வெளியெம மலனால், பொருளது புண ணியர் போகத் தினபம, தெருளது சிகைதைத் தெய்வமெ ன றெனனரி, யருளது செய்யுமெம மாதிப பிரானே. (௪௫)

ஆதி யநாதியு மாய பராசத்தி, பாதி பராபரை மேலுறை பைந்தொடி, மாது சமாதி மனோன்மனி மங்கலி, யோதுமென னுள்ளத் துடனமுகிழ்ந் தாளே (௪௬)

ஓதிய வண்ணங் கலையி னுயர்கலை, யாதியில் வேதமே யா மென றறிகிலர், சாதியும் பேதமுந் தத்துவ மாயநிற்ப, னாதி யென றோதின னாவின கிழத்தியே. (௪௭)

ஆவின கிழத்திநல் லாவடு தண்டுறை, நாவின கிழத்தி நல ம்புகழ்ந் தேத்திடின், தேவின கிழத்தி திருவாஞ் சிவமங்கை, மே வுங் கிழத்தி வினைகடிந் தாளே. (௪௮)

வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித், தினையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பா, ளெனையடிமை கொண் ட வேந்திழை யீசன், மனைவினைத் தரண வநாதியு மாமே. (௪௯)

ஆதி யநாதி யகாரணி காரணி, வேதமு மாய்ந்தனள் வே
தியர்க் காய்நின்ற, சோதி தனிச்சுடர் சொரூபமாய் நிற்கும்,
பாதி பராபரை பன்னிரண் டாதியே. (ரு0) ஆ உசக.

---

பூரணசத்தி.

அளந்தே னகலிடத் தந்தமு மீறு, மளந்தே னகலிடத்
தாதிப் பிரானை, யளந்தே னகலிடத் தாளொரு பெண்ணை, மள
ந்தே னவனரு ளாய்ந்தளந் தேனே (க)

உணர்ந்திலரீசனை யூழிச் சத்தி, புணர்ந்தது பூரணம்
புண்ணியர் தங்கள், கணங்களைந் தன்னருள் செய்கின்ற கன்னி,
குணாந்த வழிகொண்டு கும்பக மாகுமே (உ)

கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும், வம்பிற் றிக
ழு மணிமுடி வண்ணனு, மின்பக் கலவி யினிதுறை தையலு, மி
ன்பக் கலவியு ளாயொழிந் தாரே (ங)

இன்பக் கலவியி லிட்டெழு கின்றதோ, ரன்பிற் புதல்வ
ன் ருமெங்க ளப்பனாந், துன்பக் குழம்பிற் றுயருறும் பாசத்து,
ளொன்பிற் பராசத்தி பென்னம்மை தானே. (ச)

என்னம்மை யென்னப்ப னென்னுஞ் செருக்கற்று, வுன்
னம்மை யூழித் தலைவனு மங்குளன், மன்னம்மை யாகி மருவி
யுரைசெயும், பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே. (ரு)

தார்மே லுறைகின்ற தண்மலர் நான்முகன், பார்மே லி
ருப்ப தொருருவது தானுள, பூமே லுறைகின்ற போதகம் வந்
தன, ளூமே லுறைகின்ற நாயகி யாணையே. (சு)

ஆணைய மாய்வருந் தாதா விருந்தவர், மாணைய மாய ம
னத்தை யொருக்கிப்பின், பாணைய மாய பரத்தை யறிந்தபின்,
ரூணைய மாய தொருதனத் தானே. (எ)

தானே யெழுந்தவித் தத்துவ நாயகி, வானே ரொழுந்து மதியை விளக்கின, டேனே ரொழுகின்ற தீபத் தொளியுடன், மானே கடமுடை மன்றறி யீரே (௮)

அறிவான மாயையு மைம்புலக் கூட்டத், தறிவான மங்கை யருளது சேரில், பிறியா வறிவறி வாருளம் பேணு, நெறியாய சித்த நினைந்திருந் தானே. (௯)

இரவும் பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற குழலியை நாடி, யரவஞ்செய் யாம லவளுடன் றுங்கப், பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே (௧௦)

பாலனு மாகும் பராசத்தி தன்னொடு, மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட, மூலமந் தாமெனு முத்திக்கு நேர்பட, சாலவு மாயநின் றற்பரத் தானே (௧௧)

நின்ற பராசத்தி நீள்பரன் றன்னொடு, நின்றறி ஞானமு மிச்சையு மாய்நிற்கு, நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே, மன்றனை வற்றுண் மருவிடுந் தானே. (௧௨)

மருவொத்த மங்கையுந் தானு முடனே, யுருவொத்து நின்றமை யொன்று முணராந், கருவொத்து நின்று கலக்கின்ற போது, திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே (௧௩)

சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசத்தி, விந்துவு நாதமு மாயே விரிந்தனள், சந்திர பூமி சடாதரி சாத்தவி, யந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே. (௧௪)

ஆதி யிருந்த வமுத பயோதரி, மாதி யிருக்க வழியறி வாரில்லை, சோதி யிருந்தநற் றீபத் தொளியுட, னாதி யிரங்கன ளருளுடை யார்க்கே. (௧௫)

உடையவ னங்கி யுருத்திர சோதி, விடையவ னேறி விளங்கி யிருக்குங், கடையுவர் போயினுங் கண்டவர் நெஞ்சத், துடையுது வாகிய சாதகர் தாமே. (௧௬)

தாமே லுறைவிட மற்றித மானது, பார்மே லிதழ்பதி னெட்டிரு நூருள, பூமே லுறைகின்ற புண்ணியம் வந்தனள், பார்மே லுறைகின்ற பைங்கொடி யாளே. (கஎ)

பைங்கொடி யாளும் பரம னிருந்திடத், தின்கொடி யாகத் திகழ்தரு சோதியாம், விங்கொடி யாகி விளங்கி வருதலாற், பெண்கொடி யாக நடந்த துலகே. (கஅ)

நடந்தது வம்மலர் நாலுட னஞ்சா, யிருந்தனர் கன்னிக ளொட்டுட னொன்றாய்ப், படர்ந்தது தன்வழிப் பங்கயத் துள்ளே, தொடர்ந்தது வுள்வழி சோதி யடுத்தே. (கக)

அடுக்குந் தாமரை யாதியிருப்பிட, மெடுக்குந் தாமரை யிலக்கத் துள்ளது, மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல, முடிக்குந் தாமரை முச்சதி ரத்தே (௨௦)

முச்சதி ரத்தே யெழுந்த முளைச்சுட, ரெச்சதி ரத்து மிடர்பெற வோடிடக், கைச்சதி ரத்துக் கடந்த வொளிபெற, வெச்சதி ரத்து மிருந்தன டானே. (௨௧)

இருந்தன டன்முக மாறெட்டு நாலாய்ப், பரந்தன வாயு திசைதிசை தோறுங், குவிந்தன முத்தின முகவொளி நோக்கி, நடந்தது தேற லதோமுக மம்பே. (௨௨)

அமரன்ன கன்னி யரிவை மனோன்மணி, கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய, செம்பொன்செய் யாக்கை செறிகமழ நாடொறு, நம்பனை நோக்கி நவிலுகின் றாளே. ()

நவிலும் பெருந்தெய்வ நான்மறைச் சத்தி, துகிலுடை யாடை நிலம்பொதி பாத, மகிலமு மண்ட முழுதுஞ்செம் மாந்து, புகழுமுச் சோதி புனையநிற் பாளே. (௨௪)

புனையவல் லாள்புவ னத்திறை யெங்கள், வினையவல் லாளண்ட கோடிக ளுள்ளே, புனையவல் லாளைம் மண்டலத் தொளி

தன்னை, புனையவல் லாளையும் போற்றியென் பேனே. (உரு)

போற்றியென் பேன்புவ னாபதி யம்மையென, ஞற்றனு
ணிற்று மருந்தவப் பெண்பிள்ளை, சீற்றங் கடிந்த திருநுதற்
சேயிழை, கூற்றந் தாக்கின்ற கொள்ளைக் கொடியையே ()

தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி, வடிவார் திரி
புரை யாமங்கை கங்கைச், செடியார் வினைகெடச் சேர்வரை
யென்றென, றடியார் வினைகெடுக் காதியு மாமே. (உஎ)

மெல்லிசைப் பாவை வியோமத்தின மென்கொடிப், பல்
லிசைப் பாவைப் பயன்தரு பைங்கொடி, புல்லிசைப் பாவை
யைப் போகத் துரந்திட்டு, வல்லிசைப் பாவை மனம்புகுந்
தாளே. (உஅ)

தாவித்த*வப்பொருட் டானவ னெம்பிரான், பாவித்த தூவ
சம படைக்கின்ற காலத்து, மேவிப் பராசத்தி மேலொடு கீழ
துடாக, தாவிக்கு மப்பொருட் டாமது தானே. (உக)

அதுவித வென்பர வனை யறியார், கதிவர நின்றதோர்
காரணங் காணா, மதுவிரி பூங்குழன் மாமங்கை நங்கை, திக
மது வுன்னார்க டோகதவா தாமே. (கூ0) ஆ. உஎக.

---

ஆதாரவாதேயம்.

காவித முறி லவிர்ந்தது தொண்ணூறு, காவித மூலமவை
நாற்பத்து நாலுள, பாவித முனவைப் பங்கய மூலமாய்த், தா
வித மாகித் தரித்திருந் தானே. (க)

தரித்திருந் தானவ னன்றொளி நோக்கி, விரித்திருந் தான
வன் வேதப் பொருளைக், குறித்திருந் தானவன் [illegible] யைத்து,
மறித்திருந் தானவன் மாது நல்லாளே. (உ)

மாதுநல் லாளு மணாள னிருந்திடப், பாதிநல் லாளும் பகவரு மானது, சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல், வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. (௩)

வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க், கள்ளடை யாரக கமழக மாமன, மள்ளடை யானும் வகைதந்திற மாய்நின்ற, பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே. (௪)

பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதமை, பெண ணிடை யானும் பிறந்து கிடந்தது, பெண்ணுடை யாளென பி றப்பறுத் தீர்க்கின்ற, பெண்ணுடை யாளிடைப் பேச்சற்ற வாறே (௫)

பேச்சற்ற நன்பொருள் காணும் பெருந்தகை, மாச்சற்ற சோதி மனோன்மணி மங்கையாம், காச்சற்ற சோதி கடவு ளுடன்புணர்ந், தாச்சென்ற நூல்புகுந் தாலிகுந் தானே. (௬)

ஆலிக்குங் கன்னி யருமை மனோன்மணி, பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும், வேலைத் தலைவியை வேத முதல்வியை, பாலித் தொருவ னுகந்துநின் றானே. (௭)

உகந்துநின் றாணம்பி பொன்னுற்ற கண்ணே, மிகந்துநின் றானம் முழைபுக நோக்கி, யுகந்துநின் றானிவ் வுலகங்க ளெல்லா, முகந்துநின் றானவ னன்றே யொருத்தே. (௮)

குத்து முலைச்சி குழைந்த மருங்கின், மெத்தி விரித்த சுண ங்கின மொழி, புத்தகச் சீறடிப் பாவை புணர்வினைத், தொ த்த கருத்துச் சொல்லகி லேனே. (௯)

சொல்ல வொண்ணாத வழற்பொதி மண்டலஞ், சொல்ல வொண்ணாத திகைத்தங் கிருப்பார்கள், வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி, மல்லவொண் ணாத மனோன்மணி தானே.

தானே யிருநிலந் தாங்கிவின் ணாய்நிற்குந், தானே சுடி மங்கி ஞாயிறுந் திங்களுந், தானே மழைபொழி தையலு மா

நிற்கும், தானே வடவரைத் தண்கடற் கண்ணே. (கக)

கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர், மண்ணுடை யாளை மனிதரிற் கூட்டொணும், பண்ணுடை யார்கள் பதைக்கப் பற திருந்தவர், விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. (கஉ)

கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி, பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும் விண்டெண் டிசையும் விரை மலர்க கைக்கொண்டு, தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே. (கங)

கன்னி யொளியென நின்றவிச் சந்திரன், மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ், சென்னி யிருப்பிடஞ் சோபதி ஞாடன, பன்னி யிருப்பா பராசத்தி யாமே (கச)

பராசத்தி யென்றென்று பல்வகை யாலுந், தராசத்தி யான தலைபிர மாணி, யிராசத்தி யாமள வாகமத் தாளாகுங், குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே. (கரு)

உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி, யுணர்த்திய ராய் நிற்கு முன்னத னீசன, புணர்ந்தொரு காலத்துப் போகம தாகி, யிணைந்து பரமென றிசைந்திது தானே (கசு)

இதுவப் பெருந்தகை யெம்பெரு மானும், பொதுவக் கலவியும் போகமு மாகி, மதுவக் குழலி மனோன்மனி மங்கை, யதுவக கலவியு ளாயுழி யோகமே. (கஎ)

யோகநற் சத்தி யொளிபீட தானாகும், யோகநற் சத்தி யொளிமுகந் தெற்காகும், யோகநற் சத்தி யுதர நடுவாகும், யோகநற் சத்திதா ளுத்தரந் தேரே. (கஅ)

தேர்ந்தெழு மேலாஞ் சிவன்றங்கி யோடுற, வார்ந்தெழு மாயை மந்தம தாய்நிற்கு, மோர்ந்தெழு விந்துவு நாதமு மோங்கிடக், கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. (கக)

தருதனின மேவிச் சடங்குசெய் தாரே. (௩எ)

சடங்கது செய்து [illegible]புரி வ[illegible]ர்கள், கடந்தனி னுள்ளே க
ருதுவ ராகிற், றுடர்[illegible]சோதி [illegible]ழி யேறி, யடங்கி
டு மன்பின தாயிழை பாலே. (௩அ)

பாலித திருகரும் பனிமல ராறினு,மாலித திருக்கு மவற்றி
னகம்படி, சீலதனை நீக்கத திகழ்ந்தெழு மந்திர, மூலதது மே
லது முத்தது வாமே. (௩௯)

முத்து வதநதி முகநொரு மூகக்கண்ணி, சத்திச் சதி
ரி சகளி சடாகரி, பத்துக் கரதநி பராபரன் பைந்தொடி, வி
ததி யென்னுள்ள மேவிநின றுளே (௪0)

மேவிய மண்டல மூன்றுடன் கீழெரி, தாவிய கற்பகத் து
ணமதி யங்கதிர் மூவருங் கூடி மூகவ்வியாய் முனநிற்பா,
ரோவினு மேவி [illegible]ள்ளொளி யாமே (௪௧)

உள்ளொளி மூவி ரன் டோங்கிய வங்கங்கள, வெள்ளொ
ளி யங்கியின் மேவி யவரொடு, கள்ளவிழ் கோதைக கலநதுட
னேநிற்குங், கொள்ள விசுததிக கொடியமு தாமே (௪௨)

கொடியதி ரேகை குருவுள ளிருப்பப், படியது வாருமைப்
பைங்கழ லீசன, வடிவது வானதம் வநது முறையே, யிடு
முத லாறங்க மேநிழை யானே (௪௩)

ஏநிழை யாளு மிறைவாகண் மூவருங், காநதார மாறு
ம் கலைமுத லிரெட்டு, மாநதர் குளததிபு மகதிர ராயுவுஞ், சா
நதன ரேதக விருந்தனள சத்தியே. (௪௪)

சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை, முத்திக்
கு நாயகி யெனப தறிகிலர், பததியைப் பாழி லுகுத்தவப் பா
விகள், கத்திய நாய்போற் கதறுகின் றாரே. (௪௫)

ஆரே திருவின் திருவடி காணபார்க, ணேரே நின்றோதி நி
னையவல் லார்களுக், காரே குழலி கமல மலரன்ன, சீரேயுஞ்
சேவடி சிந்தைவைத் தாளே. (௪௬)

சிந்தையில் வைத்துச் சிராதியிலே வைத்து, முந்தையில் வைத்துத்தம் மூலத்திலே வைத்து நிந்தையில் வையா நினைவிலே வைத்துச, சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. ()

சமாதிசெய் வார்கட்குத் தானமுத லாகிச், சிவாதியி லாருஞ் சிலைநுக லாளை, நவாதியி லாக நயந்தது வோதி, யுவாதி யவனுக குறைவில தாமே. (சஅ)

உறைபதி தோறு முறைமுறை மேவி, நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி, மறையுட னேநிற்கு மற்றுள்ள நானகு, மிறைதினை போதினி லெய்திட லாமே. (சகூ)

எய்திட லாகு மிருவினை யின்பயன, செய்தளிர் மேனி குமரி குலாங்கனனி, மைதவழ் கண்ணிநன மாரிதூர்க கையொடு, கைதவ மின்றிக கருததுறும வாறே. (ரு௦)

கருத்துறு காலங் கருது மனமுஞ், திருத்தி யிருந்தவை சேருநிலத்து, வொருத்திபை யுனனி யுணாநதிடு மண்மே, லிருததிடு மென்குண மெய்தலு மாமே (ருக)

ஆமைபோன றேறி யகம்படி யானென, வோமமென றோதியெம முளளொளி யாய்நிற்கு, நாமநறுங்குழற் றையலைக் கண்டபின, சோம நறுமலா சூடிநின றோரே (ருஉ)

சூடிடு மங்குச பாசந் துணைவழி, கூடி மிருவளைக் கோலக்கைக் குண்டிகை, நாடு மிருபத நன்னெடி ருததிர, மாடிடுஞ் சீபுனை யாட்க மாமே. (ருங)

ஆமயன் மாலர னீசன சதாசிவன, றுமடி சூடிநின் றெயதினர் தம்பதங், காமனுஞ் சாம னிரவி கனலுடன, சோமனும் வந்தடி சூடநின றோரே. (ருச)

சூலி மாம்பிறை சூலி கபாலினி, நீடி யிளங்கொடி நின்மலி சேரின்ப நாடி நவிலிண் ஞான முருவின், சூடி மதனவழி யிண்ட முதல்வியே. (ருரு)

ஆகின்ற நாள்கலை யைம்பத் தொருவர்க, ளாகிநின் றார்க
ளெல்லாருயி ராமவ, ளாகிநின் றாளுட னாகிய சக்கரத், தாகிநின்
றானவ னாயிழை பாடே. (௬௫)

ஆயிழை யாளொடு மாதிப் பரமட, மாயதோ ரண்டவை
யாறு மிரண்டுள, வாய மனந்தோ றறுமுக மவைதனி, லேய
வரா குழலி யினிதுநின் றாளே. (௬௬)

நின்றன ணேரிழை யோடுட னேர்பட, வின்றெ னகம்ப
டி யேழு முயிர்ப்பெய் துள, துன்றிய வோரொன்ப தின்மரு
ஞ் சூழலு, ளொன்றுயா யோதி யுணர்ந்துநின் றாளே. (௬௭)

உணர்ந்தெழு மந்திர மோமெனு முள்ளே, மணந்தெழு
மாங்கதி யாகிய தாரும், குணர்ந்தெழு சூக்குமஞ் சூதியுங் கூ
டிக், கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே. (௬௮)

ஆமது வங்கியு மாதியு மீசனு, மாமது மண்டல மாருத
மாதியு, மேமது சீவன சிகையங் கிருண்டிடக், கோமலர்க்
கோதையுங் கோதண்ட மாகுமே. (௬௯)

ஆகிய கோதண்டத் தாகுமனோன்மணி, யாகிய வைம்பத்
துடனே யடங்கிடு, மாகும் பராபரை போடப் பரையவ, ளா
கு மயனங் கருமத்தள் தானே. (௭௦)

தாவிகழ மோகினி சாவான யோகினி, போன மயமு
டை யாரடி போற்றுவ, ரானவ ராவியி னாகிய வச்சிவர், தா
லும் பரசிவ மேலது தானே. (௭௧)

தானந்த மேலே தருஞ்சிகை தன்னுட, ஞானத்த மோகினி
யம்பொற் றிருவொடு, மோனையில் வைத்தது மொழிசொரு கூறது,
வானவ யோமெனு மவ்வுயிர் மார்க்கமே (௭௨)

மார்க்கங்க ளின்ற மனோன்மணி மங்கலி, யார்க்கு மறிய வ
ரியா ளவளாகும், வாக்கு மனமு மருவியோர் ஓய்விட்ட,
சேர்க்கும் பெருமைக்குத் தன்னொலி யாமே (௭௩)

நன்னெறி யாகு நழைபுலன் மாநதர்க்குப், பின்னெறி வரு ஞம் பிராணறி வததடஞ, செனனெறி யாகுஞ சிவகதி சோவா ரகருத, தன்னெறி யாவது சன்மார்கக மாமே (எச)

சன்மார்கக மாகச் சமைதரு மார்க்கமுந, துன்மார்கக மானவை யெல்லாந துரநதிடு, நனமார்க்கத் தேவரு நனனெறி யாவதுஞ், சனமார்க்கத தேவியுஞ் சததியென பாளே. (எரு)

சததியு நானுஞ சயம்புவு மல்லது, முத்தியை யாரு முதலறி வாரில்லை, யததிமேல் விததிட லததி யமுததககான, மததி யி லேற வழியது வாமே. (எசு)

அதுவிது வெனறவ மேகழி யாதே, மதுவிரி பூங்குழன மங்கைநல் லாளைப், பதிமது மேவிய பணியவல் லாரககு, விதிவழி தனனையும வெனறிட லாமே (எஎ)

வெனறிட லாகும் விதிவழி தனனையும், வெனறிட லாகும வினைப்பெரும பாசததை, வெனறிட லாகும விழைபுலன றனனையும, வெனறிடு மஙகைதன மெய்யுணர் வோரககே (எஅ)

ஓராம பதினமரு வொனறியே நினறது, பாரம பரியத்து வநத பரமிது, மாரந குழலாளு மயபதி தானுமுன, சாருப தமிது சததிய மாமே. (எகூ)

சததியி ளோடு சயமபுவு நேரபடில், விதநது விளறியே யெல்லாம் விளைநதன, வததகை யாகிய வைமபது கொருவருஞ், சிததது மேவித திருநதிடு வாரே. (அ0)

இருந்து சிவனுஞ சிலைநுத லாளும், பொருநதிய வானவர் போற்றிசெய் தேத்த, வருந்திட வவவிட மாரமு தாக, விருந தன டானங் கிளம்பிறை யெனரே, (அக)

என்று மெழுகினற வேரினை யெய்தினர், தன்றது வாகு வார் தார்குழ லாளொடு, மன்று கங்கை மதியொடு மாதவர், ... ய காரகை சோதிநின் ... (அஉ)

நின்றன ணேரிழை யாளொடு நேர்பட, வொன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது,சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய, துன்றிடு ஞானங்க டோன்றிடுந் தானே. (௮௩)

தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி, யீன்றிடு மாங்கவ ளெய்திய பல்கலை, மான்றடி கண்ணியு மாரணும வங்கெதிர் சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. (௮௪)

ஆயு மறிவுங் கடந்தணு வாரணி, மாடமதாங்கி மனோமதி யாயிடுஞ், சேய வரிவை சிவானந்த சுந்தரி, நேயம தாநெறி யாகிநின் றாளே. (௮௫)

நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப், பிறிவது செய்யாது பின்னுற நின்று, குறியது கூடிக் குறிகொண்டு நோக்கு, மறிவொடு மாங்கே யடங்கிட லாமே. (௮௬)

ஆமயன மாலரனீசனமா லாயகதி, யோமய மாகிய வொளியது மொன்றிடத், தேமய முன்ன தென்றெனை வென்றிடு, மாமய மானது வந்தெய்த லாமே. (௮௭)

வந்தடி போற்றுவர் வானவர் தானவ, ரிந்த முதலாக வெண்டிசை யோர்களுங், கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும், வந்தனை செய்யும வழிநவில் வீரே (௮௮)

நவிற்றுநன் மந்திர நன்மலர் தூபங், கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம், பயிற்று முலகினிற் பார்ப்பதி பூசை, யவிக் கொண்ட சோதிக்கோ ரர்ச்சனைதானே, (௮௯)

தாங்கி யுலகிற் றரித்த பராபர, னோங்கிய காலத் தொருவ னுலப்பிலி, பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று, பாங்குடனேற்பப் பராசத்தி போற்றே. (௯0)

பொற்கொடி மாதர் புனைகுழ லேத்தவ, நற்கொடி மாதுமை யார்வந்தலைமக, ணற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடையவிற்கொடி மாதை விரும்பி யிருந்தே. (௯௧)

விளங்கொளி யாய விரிசுடர் மாலை, துளங்கு பராசத்தித் துங்கிரு ணீக்கக, களங்கொண் மணியுடன் காம விநோத, மு ளங்கொ ளிலம்பிய மொன்று துட்டோ. (கஉ)

தொடங்கி யுலகினிற் சோதி மனோ, னடங்கி யிருப்பதென னெம்பின பெருமை, விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங் கை, யொடுங்கி யுமையொடு மோருரு வாமே. (கங)

உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி, தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற், புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை, மருவி யிறையவன மகிழவன மாயமே. (கச)

மாயம் புணாககும வளர்சடை யானடி, சாயம் புணா கருஞ் சலநதி யமலனை, காயம புணாககுங கலவியுண மாசத் தி, யாயம் புணர்க்குமவ வியோனியு மாமே (கரு)

உணர்ந்தொழிந தேனவ ளுமெங்க ளீசனைப், புணர்ந்தொ ழிந தேனபுவ ளுபதி யாரை, யணைந்தொழிந் தேனெங்க ளா தினை பாதம, பிணைந்தொழிந தேனற னருளபெற்ற வாறே.()

பெற்றுள பெருமை பெரிய மனோன்மனி, நற்று ளிறைவ னே நனபய னேயெனபர், சற்று ணறியுங் கருந்சுறி வார்கட்கு ப, பொற்று ளுலகம் புகல்தனி யாமே. (கஎ)

தனிநா யகன்றனோ டெனனெஞ்ச நாடி, யினியா ரிரு ப்பிட மேழுல கெனபர், பனியான மலர்ந்தபைம் போதுகைக் யேந்தி,கனியாய் நினைவதென காரண மம்மையே. (கஅ)

அம்மனை யம்மை யரிவை மனோனமனி, செம்மனை செய் து திருமங்கை யாய்நிற்கு, மிம்மனை செய்த வித்தில மங்கையு, மம்மனை யாதி யமர்ந்துநின றுனே. (கக)

அம்மையு மத்தனு முன்புற்ற தல்லது, வம்மையு மத்தனு

போற்றி வாரென்னை, யம்மையொ டத்தனு மியானு முடனிருந், தம்மையொ டத்தனை யானபுரிந் தேனே. (௯00) ஆடு ௯௧௪

ஏரொளிச்சக்கரம்.

ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ், ழேரொளி விந்துவி னுளெழு நாதமா, மேரொளி யக்கலை யெங்கு நிறைந்தபின், னேரொளிச் சக்கர மந்நடு வன்னியே, (க)

வன்னி யெழுத்தவை மாபல முன்னன, வன்னி யெழுத்தவை வானுற வோங்கின, வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம், வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே. (உ)

சொல்லிய விந்துவு மீரா று நாதமாஞ், சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன, சொல்லிடு நூற்றுறு நாற்பத்து நாலுந், சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே (௩)

மேல்வரும விந்துவு மவ்வெழுத் தாய்விடு, மேல்வரு நாதமு மோங்கு மெழுத்துடன், மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவின, மேல்வருஞ் சக்கர மாய்வரு ஞாலமே. (௪)

ஞாலம தாக விரிந்தது சக்கர, ஞாலம தாய்விடு விந்துவு நாதமு, ஞாலம தாயிடு மப்பதி யோசனை, ஞாலம தாக விரிந்த தெழுத்தே. (௫)

விரிந்த வெழுத்தது விந்துவு நாதமும, விரிந்த வெழுத்தது சக்கர மாக, விரிந்த வெழுத்தது மேல்வரும பூமி, விரிந்த வெழுத்தினி லப்புற மப்பே. (௬)

அப்பது வாக விரிந்தது சக்கர, மப்பினி லப்புற மன்னவ லாயிடு, மப்பினி லப்புற மாருத மாயெழு, வப்பினி லப்புற மாகாச மாமே. (௭)

ஆகாச வக்கர மாவது சொல்லிடிற் ப்ராகாச வக்கரத் து

எ.டோ யெழுத்தவை, யாகாச வவ்வெழுத் தாகிச் சிவானந்த
மாகாச வககர மாவ தறியீரோ (அ)

அறிநதிடு சக்கர மையஞ்ச விந்து, வறிந்திடுஞ் சக்கர நா
த முதலா, வறிநதிடு மவ்வெழுத தப்பதி யோர்கரு, மறிந்திடு
மப்பக லோணிலே யாமே. (கூ)

அமமுத லாறுமவ் வாதி யெழுததாகும், மம்முத லாறும
வ் வம்மை யெழுததாகு, மமமுத லாறு மிருநடு வனனியே, யி
மமுத லாகு மெழுததவை யெல்லாம் (கo)

எழுததவை நூறொடு நாறபதத நாலு, மெழுத்தவை யா
றது வநநடு வனனி, யெழுத்தவை யநநடு வசசுட ராகி, யெழு
ததவை தானமுத லநதமு மாமே (கக)

அநதமு மீறு முதலான வையற, வந்தமு மப்பதி னெட
டெ ழுதலா, லநதமு மபபதின மூனறி லமர்நதபி, னநதமு மி
நதுகை யாருட மானதே (கஉ)

ஆவின மானவை முந் நூற் றறுபது, மாவின மப்பதி னை
ந்தின மாயுறு, மாவின மபபதி னெட்டெட் டாயுறு, மாவின ம
ககதி ரோனவர வநததே (கங)

வநதிடு மாகாச மாறது நாழிகை, வநதிடு மக்கர முப்பதி
ராசியுட், வநதிடு நாளது முந நூற் றறுபதும, வநதிடு மாண்டு
வகுத்தரை யவ்வியே. (கச)

அவவின மூன்றுமவ் வாட்டது வாய் வருஞ், செவ்வின மூ
னறுய னொர்தரு வேரதாகு, சேவவின மூன்றுந் தழைத்திடு
ந தண்டகா, மிவ்வின மூனறு மிராசிக ளெல்லாம். (கரு)

இராசியுட் சக்கர மெனறு நிறைநதபின், னிராசியுட் சக்கர
மென்றறி விந்தவா, மிராசியுட் சக்கர நாதமு மொத்தபி, னி
ராசியுட் சக்கர நின்றிடு மாறே. (கசு)

நின்றிடு விந்துவென் றுள்ள வெழுத்தெல்லா, நின்றிடு நா
தமு மோங்கு மெழுத்தட, னின்றிடு மப்பதி யவ்வெழுத் தே

வரி, வின்றிடு மப்புறந் தாரகை யானதே. (கஎ)

தாரகை யாகச் சமைந்தது சக்கரந், தாரகை மேலோர் தழைத்தது பேரொளி, தாரகை சந்திர னற்பக லோன்வறத், தாரகை தாரகை தாரகை கண்டதே. (கஅ)

கண்டிடு சக்கரம் விந்து வளாவதாங், கண்டிடு நாதமுந் தன்மே லெழுந்திடக், கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின், கண்டிடு மப்புறங் காரொளி யானதே. (க௯)

காரொளி யண்டம் பொதிந்துல கெங்கும், பாரொளி நீரொளி சாரொளி காலொளி, வாரொளி யொக்க வளர்ந்து கிடந்தபின், னேரொளி யொன்றாய் நிறைந்தங்கு நின்றதே.

நின்றது வண்டமு நீளும் புவியெலா, நின்றவி வண்ட நிலைபெறக் கண்டிட, நின்றவி வண்டமு மூல மலமொக்கு, நின்றவி வண்டம் பலமது விந்துவே. (உக)

விந்துவு நாதமு மொக்க வியழுந்திடில், விந்துவு நாதமு மொக்க விளையதாம், விந்திற் குறைந்திடு நாத மெழுந்திடில், விந்துவை யெண்மடி கொண்டது வீசமே (உஉ)

வீச மிரண்டுள நாதத் தெழுவன, வீசமு மொன்று விரைந்திடு மேலுற, வீசமு நாதமு மெழுந்துட னொத்தபின், வீசமும் விந்து விரிந்தது காணுமே. (உங)

விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம், விரிந்தது விந்துவு நாதத் தளவினில், விரிந்தது வுட்கட்ட வெட்டெட்டு மாகில், விரிந்தது விந்து விளையது வாமே. (உச)

விளையது விந்து விளைந்தன வெல்லாம், விளையது விந்து விளைந்த வுயிரும், விளையது விந்து விளைந்த விஞ்ஞானம், விளையது விந்து விளைந்தவன் றானே. (உரு)

விளைந்த வெழுத்தது விந்துவு நாதமும், விளைந்த வெழுத்தது சக்கர மாக, விளைந்த வெழுத்தவை மெய்யினில் நிற்கு

ம், விளைந்த வெழுத்தவை மந்திர மாமே. (உ௬)

மந்திர சக்கர மானவை சொல்லிடிற், றந்திரத் துள்ளெ
ழு தோனெரி வட்டமாங், கந்தரத் துள்ளு மிரேகையி லொ
ன்றில்லை, பந்தம தாகும் பிரணவ முன்னிடே. (உ௭)

உன்னிட்ட வட்டத்தி லொத்தெழு மந்திரம், பின்னிட்ட
ரேகைப் பிழைப்பத்து தானில்லை, தன்னிட் டெழுந்த தகைப்ப
ரப் பின்னிற்கப், பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே (உ௮)

பார்க்கலு மாகும் பகையறு சக்கரங், காக்கலு மாகுங்
கருத்திற் றடமெங்கு, நோக்கலு மாகு நுணக்கற்ற நுண்பொ
ரு, ளாக்கலு மாகு மறிந்துகொள் வார்க்கே (உ௯)

அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து, விரிந்திடுஞ் சக்கர
மேலெழுத் தம்மை, டரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி னாலும், கு
விந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே. (௩௰)

கூறிய சக்கரத் துள்ளெழு மந்திர, மாறியல் பாக வமை
ந்து விரிந்திடுந், தேறிய வஞ்சனை சேர்ந்தெழு மாரண, மாறி
யல் பாக மறிந்துகொள் வார்க்கே. (௩௧)

மதித்திடு மம்மையு மாமாது மாகு, மதித்திடு மர்ச்சையு ம
ங்கன லாகு, மதித்தங் கெழுந்தவை காரண மாகில், கொ
தித்தங் கெழுந்தவை கட்டகி லாவே (௩௨)

கூடிய தம்பன மாரண வசிய, மாடியல் பாக வமைந்து
செறிந்திடும், பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறுந், தேடி
யுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. (௩௩)

தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே, யளிந்த வகாரத்
தை யங்கே வாக்கிக், குளிர்ந்த வரவினைக் கூடியுள் வைத்து, வ
ளிந்தவை யங்கெழு நாடிய காலே. (௩௪)

காணரை முக்கால் முழுதெனு மந்திர, மாவித் தெழுந்த
மைந் தறி யெழுத்தைய்ப், யாவித் தெழுத்து பகையற நின்ற

பின், மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே. (௬௫)
கொண்டவிம் மந்திரங் கத்த வெழுத்ததாய்ப், பண்டை யுருவிற் பகையற விண்டபின், மன்று ணிறைந்த மணிவிளக் காயிடு, மின்று மிதயத் தெழுந்த நமவென்னே. (௬௬) ஆ. சாஎ.

---

## வயிரவச் சக்கரம்.

அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்ச, வறிந்தவச் சத்தமி மேலிவை குற்ற, மறிந்தவை யொன்றுவிட டொன்றுபத் தாக, வறிந்து வலமது வாக நடவே. (௧)
நடந்த வயிரவன் சூல கபாலி, கடந்த பகைவனைக் கணைந்து போக்கிடத், துடர்ந்த வுயிரது வுண்ணும பொழுது, படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே (௨)
ஆமேவப் பூண்டருள் ளாதி வயிரவ, னாமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங், காமே தமருகம் பாசமுங் கையது, வாமே சிரத்தொடு வாளது கையே (௩)
கையது வாறுங் கருத்துற நோக்கிடு, மெய்யது செம்மை விளங்கு வயிரவன், றுய்ய ருளத்திற் றுளங்குமெய் யுற்றதாய்ப், பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. (௪)
பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம், பூசனை செய்ய மதுவுட னாடுமா, பூசனை சாந்து சவாது புழுகுநெய், பூசனை செய்துநீ பூசலை வேண்டுமே. (௫)
வேண்டிய வாறு கலசமு மாயிடும், வேண்டிய வாறினை மெய்யது பெற்றபின், வேண்டிய வாறு வரும்வழி நேட, வேண்டிய வாறது வாகுங் கருத்தே. (௬) ஆ. சகக.

---

## சாம்பவிமண்டலச்சக்கரம்.

சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொலலிடி, லாம்பத மெட்டாக விட்டதின் மேலதாங், காண்பதக் தத்துவ நாலு மைய

ழு, நாம்பதங் கண்டபி ருய்ந்த் தோமே. (க)

நாடறி மண்டல நல்லவிக் குண்டத்தக், கோடற வீதி யுங் கொடார்ந்துள் ளிரண்டழி, பாடறி பத்தட ஞறு நடுவீதி, யேடற நாலேந் திடவகை யாமே. (உ)

நாலேந் திடவகை யுள்ளதோரா மண்டல, நாலுநல் வீதியு ணல்ல விலிங்கமாய், நாலுநற் கோணமு நந்நா லிலிங்கமாய், நாலுநற் பூநடு நண்ணலவ வாறே. (௩)

அறிரு பஞ்சுநா லஞ்செழுத் தஞ்சையும், வேறுரு வாக விளந்த கிடந்தது, தேறுநி ரும்மில் சிவாய நமவென்று, கூறு மின கூறிற் குறைகளு மில்லையே. (௪)

குறைவது மில்லை குரைகழற் கூடு, மறைவது மாரண மவ வெழுக தாகித, திறமது வாகத வெளியவல் லாககு, விரவி ல்லை யெனறென நியமபினர் காணே. (௫)

காணும் பொருளுங கருதிய தெய்வமும, பேணும் பதியும பெருகிய தீாததமு, மூனறு முணர்வு முறககமுந தானுகக், கா ணுங கனகமுங காரிகை யாமே. (௬)

ஆமே யெழுததஞ்சு மாம்வழி யேயாகப், போமே யது தானும போமவழி யேபோனு, ஞமே நினைததன செய்யவு மா குமப், பாாமே லொருவா பகையில்லை தானே. (௭)

பகையில்லை யென்றும் பணிந்தவர் தம்பா, னகையில்லை காணுந நணமைக ளாகும், வினையில்லை யெனறும் விருத்தமு மி ல்லை, தகையில்லை தானுஞ் சலமது வாமே. (௮)

ஆரு முணாசெய்ய லாமஞ் செழுத்தாலே, யாரு மறியாத வானநத ரூபமாம், பாரும் விசும்பும பகலு மதியநி, யூனு மு யிரு முணர்வது வாமே. (௯)

உணர்ந்தெழு மந்திர மோமெனு முன்னோ, யிணர்ந்தெழு

மாங்கத நாதிய தாகும், குளிர்க்கெழு கூதனுங் கூதியுங் கூடிக், கணக்கெழுங் காணுமக ளாமுகை யாலே. (௪௦) ஆ. ௫௨௩.

புவனாபதிசக்கரம்.

ககராதி யோரைந்துங் காணிய பொன்மை, யகராதியோ ராறரத்தமே போலுஞ், சகராதி யோரநான்குந் தானசுத்த வெண்மை, ககராதி மூவித்தை காமிய முத்தியே. (௧)

ஓரி லித்துவே யுரையுமித் தெய்வத்தைத், தேரிற் பிறிதில்லை யாதென்று செப்பக்கேள், வாரித்த திரிகோண மனமினைய முத்தியுந், தேரி லறியுஞ் சிவகாயந் தானே. (௨)

ஏக பராசத்தி யீசற்கா மயக்கமே, யாகம் பராவித்தை யாமுத்தி சித்தியே, யேகம் பராசத்தி யாகச் சிவகுரு, யோகம பராசத்தி யுண்மையெட் டாமே (௩)

எட்டாகிய சித்தி யெட்டாகும் யோகத்துக, கட்டாகு நாகாந்தத் தெட்டுங் கலப்பித்த, தொட்டாத விந்துவுந் தான னு மொழிந்தது, கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே. (௪)

ஏதும் பலமா மியந்திரா சனமடி, யோதிக குருவி னுப தேச முட்கொண்டு, நீதங்கு மங்க நியாசந் தனைப்பண்ணிச், சாதங் கெடச்செபிற் சட்கோணந் தானிடே. (௫)

சட்கோணந் தனனில் ஸ்ரீமஹிரீம் தானிட்டு, வட்கோண மாதின் றலையில்ரீங் காரமிட், டெகோணமுஞ்சூழ வெழில்வட்ட மிட்டுப்பின, மிக்கிரெட் டகர மம்முகன் மேலிட்டே. ()

இட்ட விதழ்க ளிடையந் தரத்திலே, யட்டவுவ் விட்ட தின மேலே யுவ்விட்டுக், கிட்ட விதழுகளின் மேலே கிரோம்கிரோ, மிட்டு வாமத்தாங் கிரோங் கென்று மேலிட்டே (௭)

மேவிய சக்கர மீது வலத்திலே, கோவை யுடையுவ குரோங்கிரோங் கென்றிட்டுத், தாவில் ரீங்காரத்தாற் சக்கரஞ்

சூழ்ந்து, பூவைப் புவனா பதியைப்பின் பூசியே. (அ)

பூசிக்கும் போது புவனா பதிதன்னை, யாசற் றகத்தினி லாவா கமபண்ணிப், பேசிப் பிராணப் பிரதிட்டை யதுசெய்து, தேசுற் றிடவே தியாக மதுசெய்யே. (௯)

செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங், கையிற் படைய ங்குசபாசத் தோடபயம், மெய்யி லணிகல னிரத்தின மாமேனி, துய்ய முடியும் வயவத்திற் றேற்றமே. (௧0)

தோற்றப் பொருளை நீக்கித் துதித்தடை விற் பூசித்துப், பார்ப்போ னகமேத்தி ரதகாற் பயினோற் குதி, நாற்பால நாரதா யா சுவாகா வென்று,சீரப் பாகச் சேடத்தை மாற்றிப்பின் சீவியே

சீவிப்ப தன்முன்னே தேவியை யுத்வாகனத் தார், பாவித் திதய கமலம பதிவித்தங், கியாவாக்கு மொட்டா வியந்திர ராசனை, நிவைத்துச் சேவி நினைந்தது தருமே (௧௨)

ஆக ௪௬௫

---

நவாக்கரி சக்கரம்.

நவாக்கரி சக்கர நானுரை செய்யின், னவாக்கரி யொன்று நவாக்கரி யாக, நவாக்கரி யெண்பத் தொருவகை யாக, நவாக் கரி யக்கிலீ சௌமுத லீறே. (௧)

சௌமுத லவ்வொடு டௌவுட னுங்கிரீம், கௌவுநை யுளுங் கலந்திரீம் சிரீமென, டௌவவி லெழுங்கிலீ மந்திர பாதமாச், செவ்வு ளெழுந்த சிவாய நமவென்னே. (௨)

நவாக்கரி யாவது நானறி வித்தை, நவாக்கரி யுள்ளெழு நன்மைக ளெல்லா, நவாக்கரி மந்திர நாவுளே யோத, நவாக்கரி சத்தி நலந்தரு தானே. (௩)

நலந்தரு ஞானமுங் கல்வியு மெல்லா, முரந்தரு வல்வினை யும்மைவிட் டோடிஞ், சிரந்தரு தீவினை செய்வ தகற்றி, வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. (௪)

கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன செம்பிடை, கொண டிடு மோலை குறித்த வினைகளை, வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கு, நின்றிடுஞ் சக்கர நினைக்கு மளவே (௫)

நினைத்திடு மசஷரீ மகலீ யீறு, நினைத்திடுஞ் சக்கர மாதி யுமீறு, நினைத்திடு நெல்லொடு புல்வினை யுள்ளே, நினைத்திடு மரசசனை நேர்தரு வாளே. (௬)

நோதரு மத்திரு நாயகி யானவள, யாதொரு வண்ண மறிந்திடும் பொற்பூவை, கார்தரு வண்ணங் கருதின கைவரு, நாதரு வண்ண நடந்திடு நீயே (௭)

நடந்திடும் பாரினி லன்மைக ளெல்லாங், கடந்திடுங் காலனு மெண்ணிய நாளும, படர்ந்திடு நாமமும பாய்கதிர் போல, வடைந்திடு வண்ண மடைந்திடு நீயே. (௮)

அடைந்திடும பொனவெள்ளி கல்லுட னெலலா, மடைந்திடு மாதி யருளுந் திருவு, மடைந்திடு மண்டல தமராகள வாழ்வு, மடைந்திடும வண்ண மறிந்திடு நீயே. (௯)

அறிந்திடு வாரக ளமராக ளாகத, தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன, பரிந்திடும யானவன பாய்புனல் சூடி, முரிந்திடு வானை முயன்றிடு நீரே. (௰)

நீரணி சககரம நோதரு வண்ணங்கள, பாரணி யும்உயிர் முனஸ்ரீ மீருந, தாரணி யுமபுகழ்த் தையனல் லாடனைக, காரணி யும்பொழிற் கண்டுகொ ளீரே (௧௧)

கண்டுகொ ளுந்தனி நாயகி தனனையு, மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும, பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர், நின்றுகொ ளும்நிலை பேறுடை யானையே. (௧௨)

பேறுடை யாடன பெருமையை யெண்ணிடி, லூறுடை யார்களு கம்வச மாயிடு, மாறுடை யார்களும் வாழ்வது நல்கிடு, கூறுடை யானையுங் கூறுமி னீரே. (௧௩)

கூறுமி னெட்டுத் திசைக்குந் தலைவனை, யாறுமி னண்டத் தமரர்கள் வாழ்வென, மாறுமின் வையம் வரும்வழி தன்னையு, தேறுமின் றூயநி சேவடி சேர்ந்தே. (௧௪)

சேவடி சேரச் செறிய விருந்தவா, நாவடி யுள்ளே நவின்ற நின்றேத்தவர், பூவடி யிட்டுப் பொலிய விருந்தவர், மாயடி காணும் வகையறி வாரே (௧௫)

ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கரம், மைம்முத லாக வமர்ந்திரீ மீருரு, மம்முத லாகி யவாசகுடை யாடனை, மைம்முத லாக வழுந்திடு நீயே (௧௬)

வழுந்திடு நாவுக கரசிவ டனனப, பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந, தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லானை, முகந்துளு முனனெழுக கண்டுகொ ளீரே (௧௭)

கண்டவிச சககர நாவி லெழுந்திடிற், கொண்டவிம் மந்திரங கூத்தனை குறியதா, மனறிலுள வித்தையு மானுடர் கையதாய, வெனறிடும வையக மெலலியல் மேலியே (௧௮)

மெல்லிய லாகிய மெய்பபொரு ளாடனைச, சொல்லிய லாலே தடர்ந்தங கிருநதிடும, பல்லியல் பாகப பரநதெழு நாட்பல, நல்லியல் பாலே நடநதிடும தானே (௧௯)

நடநதிடு நாவினு ணனமைக ளெல்லாந, றுடர்நதிடுஞ் சொல்லொடு சொற்பொரு டானுங, கடநதிடு கல்விக் கரசிவ ளாகப, படர்நதிடும் பாரிற் பகையில்லை தானே. (௨௦)

பகையில்லை கௌமுத லைபது வீரு, நகையில்லை சக்கர நல்லறி வார்க்கு, மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம், வகையில்லை யாக வணங்கிடுந் தானே. (௨௧)

வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை, மலங்கிடு நல்லுயி ரான வையெல்லாம், மலங்கிடுங் காம வெகுளி மயக்கந், துடங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. (௨௨)

தானே கழறித் தணியவும் வல்லனாய்த், தானே நினைத்த
வை சொல்லவும் வல்லனாய்த், தானே தனிநடங் கண்டவ ட
னனையுந, தானே வணங்கித் தலைவனு மாமே. (உ௩)

ஆமே யனைத்துயி ராகிய வம்மையுந, தாமே சகலமு மீன்
றவத் தையனு, மாமே யவளடி போற்றி வணங்கிடிற், போமே
வினைகளும் புண்ணிய னாகுமே. (உ௪)

புண்ணிய னாகிப் பொருந்தி யுலகெங்குந, கண்ணிய னாகி
க கலந்தங் கிருந்திடுந, கண்ணிய னாகித் தரணி முழுதுசகு; ம
ண்ணிய னாக வமர்ந்திருந் தானே (உ௫)

தானது கிரீம் கௌவது வீரு, நானது சக்கர நனறறிவா
ர்க் கெலாநு, கானது கனனி கலந்த பராசத்தி, கேளது வை
யக கிளரொளி யானதே. (உ௬)

ஒளிக்கும் பராசத்தி யுளளே யமரிற், களிக்குமிச் சிந்தை
யிற் காரணங் காட்டித, தெளிககு மழையுடன செல்வ முண்டா
சகு, மளிககு மிவளை யறிந்துகொள வாககே (உ௭)

அறிந்திடுஞ் சக்கர மர்ச்சனை யோடே, வெறிந்திடும் வை
யத் திடரவை காணல், மறிந்திடு மனனனும் வந்தனை செய்யு
ம், பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. (உ௮)

புகையில்லை சொல்லிய பொனனொளி யுண்டாங், குகை
யில்லை கொல்வ திலாமையி னாலே, வகையில்லை வாழுகினற ம
னனுயிர்க் கெல்லாஞ், சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே.

சேர்ந்தவ ரென்றுந் திசையொளி யானவர், காய்ந்தெழு
மேல்வினை காணகி லாதவா, பாய்ந்தெழு முள்ளொளி பாரிற்
பரந்தது, மாய்ந்தது காரிருள் மாமொளி தானே. (௩௰)

ஒளியது ஹௌமுன் கிரீமது கிருங், களியது சக்கரங் க
ண்டறி வார்க்குத், தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப், ப
ளிவது பஞ்சாக் கரமது வாமே. (௩௧)

ஆமே சதாசிவ நாயகி யானவ, ளாமே யகோமுகத் து
ளளறி வானவ, ளாமே சுவையொளி யூறோசை கண்டவ, ளா
மே யனைத்துயிர் தனனுரு மாமே. (௩௨)

தனனுரு மாகித் தரணி முழுதுங்கொண், டென்னுரு மா
கி யிடம்பெற நின்றவள, மண்ணுரு நீரனல் காலுரு வானு
ருவ, கண்ணுரு மெய்யுருவ காணலு மாமே. (௩௩)

காணலு மாகுங் கலந்துயி ர செய்வன, காணலு மாகுங்
கருத்து ளிருந்திடற, காணலு மாகுங் கலந்து வழிசெயச,
காணலு மாகுங் கருத்துற நிலலே. (௩௪)

நின்றிடு மேழு புவனமு மொன்றாக, கண்டிடு முள்ளங்
கலந்தெங்குந் தானாகக, கொண்டிடு வையங் குணம்பல த
னனையும், விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. (௩௫)

மெய்ப் பொருளௌமுதல் ஹௌவது வீறாக, கைப்பொ
ருளாகக் கலந்தெழு சக்கரங், தற்பொரு ளாகச சமைந்தமு
தேஸ்வரி, நற்பொரு ளாக நவிருந் தானே. (௩௬)

தானதி னுள்ளே சமைந்தமு தேஸ்வரி, காலது கொண்டு
கலந்துற வீசிடில், நாளது நாளும் புதுமைகள கண்டபின, தே
ளது காயமுங் கேடில்லை காணுமே. (௩௭)

கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின, ஞடில்லை கா
ணு நாண்முத லற்றபின, மாடில்லை காணும் வருமவழி கண்ட
பின, காடில்லை காணுங் கருத்துற நிடத்துக்கே. (௩௮)

உற்றிட மெல்லா முலப்பிலபா ழாகக், கற்றிட மெல்லா
ங் கடுவெளி யானது, மற்றிட மில்லை வழியில்லை தானில்லை, ச
ற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. (௩௯)

நின்றிடு மேழ்கடலேழ்புவி யெல்லாம், நின்றிடு முன்னா நி
னைத்தவை தானொக்கு நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட

நின்றிடு மேலை விளக்கொளி தானே. (௪௰)

விளக்கொளி யெழுந்த வெல்லது வீரு, விளக்கொளி
க்கர மெய்ப்பொரு ளாகும், விளக்கொளி யாகிய மின்கொடி
யாளை, விளக்கொளி யாகி விளங்கிடு நீயே. (௪௧)

விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லில், விளங்கி
டு மெல்லிய லானது வாகும், விளங்கிடு மெய்நின்ற ஞானப்
பொருளை, விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. (௪௨)

தானே வெளியென வெங்கு நிறைந்தவ, டானே பரம
வெளியது வானவ, டானே சகலமு மாகி யழித்தவ, டா
னே யனைத்துள வண்ட சகலமே. (௪௩)

அண்டத்தி னுள்ளே யளப்பரி தானவள், பிண்டத்தி னு
ள்ளே பெருவெளி கண்டவள், குண்டத்தி னுள்ளே குணம்ப
ல காணினுங், கண்டத்தி னிலற கலப்பறி யார்களே (௪௪)

கலப்பறி யார்கடல் சூழுல கெல்லா, முலப்பறி யாருட
லோடுயி ரதனைச் சிலப்பறி யாசில தேவரை நாடித், தலை
ப்பறி யாகச் சமைந்தவா தானே (௪௫)

தானே யெழுந்தவச் சக்கரஞ் சொல்லிடின், மானே மதி
வரை பதிட்டு வைத்தபின, நேனே யிரேகை திகைப்பற வொ
ன்பதிற், றேனே கலந்த வரையெண்பத் தொன்றுமே. (௪௬)

ஒன்றிய சக்கர மோதிடும் வேளையில், வென்றிகொண் மே
னி மதிவட்டம் பொன்மையாங், கன்றிய ரேகை கலந்திடுஞ்
செம்மையி, லொன்றிய வம்மை யெழுத்தவை பச்சையே. (௪௭)

ஏய்ந்த மரவுரி தன்னி லெழுதிய, வாய்ந்தவிப் பெண்ணெ
ண்பத் தொன்றில் நிறைத்தபின், காய்ந்தவி நெய்யெட் டலக்
குட னோமமுங், மாக்கலந் தாழுவி யாகுதி பண்ணுமே. (௪௮)

பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி, யெண்ணிய சாட்

களி யின்பமு மெய்திடு, நண்ணிய காமமு நான்முக னுந்தீ
பின், றுண்ணென நேயநற் சேர்க்கலு மாகுமே, (சக)

ஆகின்ற சநதநங் குங்குமங் கத்தூரி, போகின்ற சாந்து
சவாது புழுகுநெ, யாகின்ற கற்பூர மாகோ சனீருஞ், சேர்
கின்ற வொனபதுஞ் சேரநீ வைத்திடே. (ரு)

வைத்திடும் பொனனுடன மாதவ நோக்கிடிற், கைசசிறு
கொங்கை கலநதெழு கனனிபைத, தச்சிது வாகச் சமைந்த
விம் மநதிர, மர்ச்சனை யாயிர மாயிரஞ் சிந்தியே. (ருக)

சிநதையி னுளளே திகழதரு சோதியா, வெநதை கரங்க
ளிருமூனறு முளளது, பநதமா சூலம படைபாசம் வில்லம்பு,
முநதகி லீமெழு முனனிரு தானே (ருஉ)

இருந்தனர் சத்திக ளறுபதது நால்வ, ரிருந்தனர் கன்னிக
ளெண்மவகை யெண்ம, ரிருநதனா சூழ வெதிரசக கரததே, யி
ருந்த கரமிரு வில்லமபு கோணடே (ருங)

கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க், கண்டவிம்
முத்தங் கனல்திரு மேனியாயப, பணடமர் சோதிப் படீக
மானவ, ருணடங் கொருததி யுமரவல் லாருககே (ருச)

உணர்ந்திருந துள்ளே யொருததியை நோக்கிற், கலநதிருந்
தெங்குங் கருணை பொழியு, மணநதெழு மோனை யொளியது
காணும், புணர்ந்தெழு சககரந தானருு வாளோ (ருரு)

தருவழி யாகிய தத்துவ ஞானங், குருவழி யாகுங் குண
ங்களு ணினறு, கருவழி யாகுங் கணககை யறுத்துப், பெருவ
ழி யாக்கும் பேரொளி தானே (ருசு)

பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர், சீரொளி யாகித
திகழ்தரு நாயகி, காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்,
பாரொளி யாகப் பரந்துநின் றாளே. (ருஎ)

பரந்த கரமிரு பங்கய மேந்திக், குவிந்த கரமிரு கொய்த

ளிர்ப்பாணி, பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவள, மிரு
க்தநல் லாடை மணிபொருந் தினதே. (௫௮)

மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை, பணிபவ ரன்றி யரு
ளில்லை யாகுப, தணிபவர் நெஞ்சினுட் டன்னரு ளாகிப், பணிப
லாக கன்றே பரகதி யாமே. (௫௯)

பரந்திருந் துள்ளே யறுபது சத்தி, கரந்தன கன்னிக ளுப்
படி சூழ, மலர்ந்திரு கையின மலரவை யேந்திச, சிறந்தவ ரே
த்துஞ் சிரீந்தன மாமே. (௬௦)

தனமது வாகிய தையலை நோக்கி, மனமது வோடி மரிக்
கிலோ ராண்டிற், கனமிவை யறுக கருதிய நெஞ்சங, தினகர
ரிட செய்திய தாமே (௬௧)

ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர், போகின்ற பேரொ
ளி யாய மலர்ந்தாய், போகின்ற பூரண மாக நிறைந்தபின்,
சேர்கின்ற செந்தழன் மண்டல மானதே. (௬௨)

ஆகின்ற மண்டலத் துள்ளே யமர்ந்தவ, ளாகின்ற வையம
த் தறுவகை யானவ, ளாகின்ற வையபத் தறுசத்தி நோக்கு,
வாகின்ற வையபத் தறுவகை சூழவே (௬௩)

சூழ்ந்தெழு சோதி சுடாமுடி பாதமா, யாங்கணி முத்த
மழகிய மேனியுற, தாங்கிய கையவை தாங்கினி ஞானமா, வேந்
த கரங்க ளெடுத்தமா பாசமே. (௬௪)

பாசம தாகிய வேரை யறுத்திட்டு, நேசம தாக நினைக்கி
ரு முமமுளே, காசம தெல்லா கடந்திடு மையாண்டிற், சாசிலி
மேலமர் கண்ணுத லாகுமே. (௬௫)

கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி, பண்ணுறு நாதம்
பகையற நின்றிடில், விண்ணமர் சோதி விளங்க ஹிரீங்கார,
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. (௬௬)

மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக், கண்டகத

துள்ளே கருதி யிருந்திடும், விண்டகத் துள்ளே விளங்கி வருத லாறு, நடுவகத் துள்ளவை தாரகை யுமாமே. (சுஎ)

தாங்கிய நாபித் தடமலர் மண்டலத், தோங்கி யெழுங் கலைக் குள்ளுணர் வானவ, ளோங்க வரும்பிறப் பெண்ணி யறுத் திட, வாங்கிய நாதம் வலியுட னாகுமே. (சுஅ)

நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம், பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம், பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தா, ளாவுக்கு நாயகி யங்கமர்ந் தாளே (சுகூ)

அன்றிரு கையி லளந்த பொருண்முறை, யின்றிரு கையி லெடுத்தவெண் குண்டிகை, மன்றது காணும் வழியது வாசலே, கண்டவ கிருந்தவா காரணி காணுமே (எ௰)

காரணி சத்திக ளைம்பத் திரண்டெனக், காரணி கன்னிகை யைம்பத் திருவராய்க், காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்கும், காரணி தன்னரு ளாகிநின் றாளே (எக)

நின்றவிச் சத்தி நிலைபெற நின்றிடிற், கண்டவிவ் வன்னி கலந்திடு மோராண்டிற், கொண்ட விரதநீர் குன்றுமு னின்றிடின், மன்றினி லாடு மணியது காணுமே. (எஉ)

கண்டவிச் சத்தி யிருதய பங்கயங், கொண்டவித் தத்துவ நாயகி யானவள், பண்டைய வாயுப் பகையை யறுத்திட, விண்டெழ மனத்து ளினிதிருந் தாளே. (எங)

இருந்தவிச் சத்தி யிருநாலு கையிற், பரந்தவிப் பூங்கிளி பாச மழுவாள், கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங், குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. (எச)

உகந்தனள்* பொன்முடி முத்தார மாகப், பரந்த பவள மும் பட்டாடை சாத்தி, மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து, நிறைந்தங் கிருந்தவ டான்பச்சை யாமே. (எரு)

பச்சை யிவளுக்குப் பக்கமா ராறெட்டிற், கொச்சையா

ரெண்மர்கள் கூடி வருதலார், கச்சணி கொங்கைகள் கையிரு
காப்பதா, வெச்ச விடைச்சி யினிதிருந் தாளே. (எசு)

தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக், காலது வாகக் க
லந்துகொள் ளென்று, மாலது வாக வழிபாடு செய்துநீ, பால
து போலப் பரந்தெழு விண்ணிலே. (எஎ)

விண்ணமர் நாபி யிருதய மாங்கிடைக், கண்ணமர் கூப
ங் கலந்து வருதலால், பண்ணமர் நாதத்தின் மண்டல மான
து, தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே. (எஅ)

கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள, தாபத்துச் சத்தித்
தயங்கி வருதலால், தாபத்துக் கைக ளடைந்தன நாலைந்து, பா
ச மறுக்கப் பரந்தன சூலமே (எகூ)

சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய், வேலம்
பு தமருக மாகிளி விற்கொண்டு,காலம்பூ பாச மழுகத்தி கைக
கொண்டு, கோலஞ்சேர் சங்கு குவிந்தகை பெண்ணதே. (அ0)

எண்ணமா சத்திக ளெற்பத்து நாலு—மெண்ணமர் சத்தி
க ளெற்பத்து நாலவரா, மெண்ணிய பூவித ழுள்ளே யிருந்தவ,
ளெண்ணிய வெண்ணங் கடந்துநின் றாளே (அக)

கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு, தொடர்ந்த
ணி முத்து பவளங்கச் சாகப், படர்ந்தல்குற் பட்டாடை பா
தச் சிலம்பு, மடந்தை சிறியவள் வந்துநின் றாளே (அஉ)

நின்றவிச் சத்தி நிரந்தர மாகவே, கண்டிடு மேரு வணி
மாதி சாருகிப், பண்டைய வானின் பகட்டை யறுத்திட்டு,வெ
ன்றிய தீப முணர்ந்தார்க்குண் டாமே, (அங)

உண்டோ ரதோமுக முத்தம மானது, கண்டவிச் சத்தி
சதாசிவ நாயகி, கொண்ட முகமைந்து கூறுங் கரங்களு, மொ
ன்றிரண் டாகவே மூன்றுநா லானதே (அச)

நனமணி சூலங் கபாலங் கிளியுடன், பன்மணி நாக மழு கத்தி பந்தாகும், கன்மணி தாமரைக் கையிற் றமருகம், பொன்மணி பூணாரம் பூசனை யானதே. (அரு)

பூசனை சத்திக ளெண்ணைவர் சூழவே, நேசவள் கன்னிக ணேற்பதது நேரதாய்க், காசினி சக்கரத் துளளே கலந்தவள், மாசடை யாமன மகிழ்ந்திருந் தாளே. (அசு)

தாரத்தி னுளளே தயங்கிய சோதியைப், பாரத்தி னுள்ளே பரந்த தொழுந்திட, வேரது வொன்றினை நெண்ணு மதுவே மயங், காரது போலக் கலந்தெழு மண்ணிலே (அஎ)

மண்ணி லெழுந்த அகார உகாரங்கள, விண்ணி லெழுந்து சிவாய நமவென்று, கண்ணி லெழுந்தது காண்பரி தன்று கொல், கண்ணி லெழுந்தது காட்சி தரவென்றே. (அஅ)

என்றங் கிருந்த வமுத கலையிடை, சென்றங் கிருந்த வமுத பயோதரி, கண்டங் கரியரு வெளிபோன மண்ணிடை, கொண்டங் கிருந்தது வண்ண மமுதே (அகூ)

அமுதம தாக வழகிய மேனி, படிகம தாகப் பரந்தெழு முளளே, குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்து, கெமுதம தாகிய கேடிலி தானே. (கூ0)

கேடிலி சத்திகண் முப்பத் தறுவரு, நாடிலி கன்னிக ளொன்ன பதின்மரும், பூவிலி பூவித முள்ளே யிருந்தவர், காளி லி தனனை கணுகினர்க்கே. (கூக)

நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங், கண்டது சோதி கருத்து ளிருந்திடக், கொண்டது வோராண்டு கூடி யருமைக்கு, விண்ட வெளகாரம் விளங்கின வன்றே. (கூஉ)

விளங்கிடு வானிடை நின்றனை யெல்லாம், வளங்கிடு மண்டல மன்றுயி ராக, கலந்திளர் கன்மைக் கூரண னெருந்தக, சணங்கிடை நின்றிவை செய்வது மாமே. (கூங)

ஆமே யதோமுக மேலே யமுதமாய்த், தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனுங், காமேல் வருகின்ற கற்பக மானது, பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே (௯௪)

பொற்கொடி யாளுடை பூசனை செய்திட, வக்களி யாகிய வாங்காரம் போயிடு, மற்கட மாகிய மண்டலந் தன்னுளே, யிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. (௯௫)

பேதை யவளுக்குப் பெண்மை யழகாகுந், தாதை யிவளுக்குத் தாணுவு மாயிற்கு, மாதை யவளுக்கு மனோன்ம னிலத மாய்க், கோதையர் சூழக் குவிந்திட காணுமே (௯௬)

குவித்தனள் சத்திகள் முப்பத் திருவர், கடந்தனர் கன்னிக ளொண்மர் சூழப், பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே, யிருந்தனள் காணு மிடம்பல கொண்டே (௯௭)

கொண்டவ கிருந்தனர் கூத்த னொளியினைக், கண்டங் கிருந்தனர் காரணந் துள்ளது, பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமோ, வின்றென மனத்துளே யில்லடைந் காளுமே (௯௮)

இல்லடைந் தானுக்கு மில்லாத தொன்றில்லை, யில்லடைந் தானுக் கிரப்பது தானில்லை, யில்லடைந் தானுக் கிமையவ தாமொவ்வா, ரில்லடைந் தானுக்கு மில்லாதில் லானையே ()

ஆனை மயக்கு மறுபத்து நாற்றறி, யானை யிருக்கு மறுபத்து நாலொளி, யானை யிருக்கு மறுபத்து நாலறை, யானையுங் கோடு மறுபத்து நாலிலே. (௧௦௦)

ஆ அதிகாரம் - ௧௮௰-திருமந்திரம்-௫௫௫.

காலாங்கத்திரம் முற்றும்.

ஆ சிறப்புப்பாயிரமுடைய - அதிகாரம்-௧௨௰.

கூடிய திருமந்திரம்-௧௪௪௮

## ஐந்தாந் தந்திரம்.



### சுத்தசைவம்

ஊரு முலகமு மொக்கப் படைக்கின்ற, பேரறி வாளன் பெருமை குறித்திடின், மேருவு மூவுல காளி யிலங்கெழுந், தாரணி நால்வகைச் சைவமு மாமே (௧)

சத்து மசத்துஞ் சதசத்துந் தான்கண்டு, சித்து மசித்துஞ் சேர்வுறா மேநீத்துச், சுத்த மசுத்தமுந் தோய்வுறா மேநின்று, நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே (௨)

கற்பனை கற்றுக் கலைமன்னு மெய்யோக, முற்பத ஞான முறைமுறை நண்ணியே, சொற்பத மேவித் துரிசற்று மேலான, தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. (௩)

வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்தர், நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர், பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய, நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே (௪)

### அசுத்தசைவம்.

இணையார் திருவடி யேத்துஞ்சீ ரங்கத், திணையா ரிணைக்குழை யீரணை முத்திரை, குணமா ரிணைகண்ட மாலையுங் குன்றா, திணைவாஞ் சரியை கிரியையி னார்க்கே. (௧)

காதுப்பொ னார்ந்த கடுக்க னிரண்டுசேர்த், தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன், சோதனை செய்து வுபதேச மார்க்கரா, போதி யிருப்பா ரொருசைவ ராகுமே. (௨)

கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டனர், கண்டங்க ளொன்பதுங் கண்டா ரரும்பொருள், கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டமாம், கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. (௩)

ஞானி புவியெழு மன்னுல கனைத்துமாம், மோன திசையு
முழுவென் றொன்ன சித்தியு, மேனை விளைவு மெழுகா பரையிறு
க, கோனொடு தனையுங் காணுங் குணத்தனே (௪) ஆ அ.

---

மார்க்கசைவம்.

பொன்னாற் சிவசாதனம்பூதி சாதன, நன்மார்க்க சாத
ன மாஞான சாதனந், துன்மார்க்க சாதன தோன்றாத சாத
னஞ், சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே (௧)

கேடறு ஞானி கிளர்ஞான பூபதி, பாடறு வேதாந்த சித்
தாந்த பாகத்தி, னூடுறு ஞானோ தயனுண்மை முத்திசேர்,
பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே (௨)

ஆகம மொன்பா னதிலான நாலேழு, மோகமி னாலேழு
முப்பேத முற்றுடன், வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மை
யொன், றாக முடிந்த வருட்சுத்த சைவமே. (௩)

சுத்த மசுத்தந் துரியங்க ளோரேழுஞ், சத்து மசத்துந்
தணந்த பராபரை, யுய்த்த பராபரை யுள்ளாம் பராபரை, யத்த
னருட்சத்தி யாயெங்கு மாமே. (௪)

சத்து மசத்துந் தணந்தவர் தானாகிச், சித்து மசித்துந்
தெரியாச் சிவோகமாய், முத்தியு மானந்த சத்தியுண் மூழ்கினார்,
சித்தியு மங்கே சிறந்துள தானே. (௫)

தன்னைப் பரனைச் சதாசிவ னென்கின்ற, மன்னைப் பதிபசு
பாசத்தை மாசற்ற, முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை,
யுன்னத் தருஞ்சுத்த சைவ ருபாயமே. (௬)

பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போத, மாரண மந்த
மதித்தானந் தத்தோடே, நேரான வீராந் தநிதி யெம்போகங்,
காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே. (௭)

மாறுத ஞான மறிப்பற மாயோகர், தேருஞ் சித்தையை

த் தேற்றிச் சிவமாக்கிப், பேரான பாவனை பேணி நெறிநிற்றல், கூறுங் ஞானி சரிதை குறிக்கிலே. (௮)

வேதாந்தங் கண்டோர் பிரமவித் தியாதரர், நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள், வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர், சாதாரண மன்ன சைவ ருபாயமே. (௯)

விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள், கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிக, ளெண்ணினைச் சென்றணு காம லெனப்படு, மண்ணினைச் சென்றணு காப்பசு பாசமே. ()

ஒன்று மிரண்டு மிலதுமா யொன்றாக, நின்று சமய நிராகார நீங்கியே, நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற், சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (௧௧) ஆ ௧௬

---

கடுஞ்சுத்தசைவம்.

வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி, யாடம் பரமின்றி யாசாபா சஞ்செற்று, பாடொன்று பாசம பசுத்துவம் பாழ்படச், சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே. (௧)

உடலான வைந்தையு மோராறு மைந்து, மடலான மாமாயை மற்றுள்ள நீவப், படலான கேவல பாசந் துடைத்துத், திடமாய்த் தனையுற்றல் சித்தாந்த மாக்குமே. (௨)

சுத்தச் சிவனுரை தானதிற் றேறாமல், முத்தர் பதப்பொருண் முத்திவித் தாமூல, மத்தனை யானமா வாதனை யடைந் தற்றும், சுத்தச் சிவமாவ ரேசுத்த சைவரே, (௩)

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே, தானென் றுநானென் றிரண்டிலாத் தற்பரந், தானென்று நானென்ற தத்துவ நல்கலாற், றானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே. (௪)

சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தா, லாற்றரி தாகிய

வைந்து மடங்கிடு, மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற் கும், பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. (ரு) ஆ. உஎ.

---

சரியை.

நேர்ந்திடு மூல சரியை நெறியிதென, றூட்டிடுங் காலங் கி கஞ்ச மலையமா,னோர்ந்திடுங் கந்துரு கேணமினைகள் பூதலத், தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே, (க)

உயிர்க்குயி ராய்நிற்ற லொண்ஞான பூசை, யுயிர்க்கொளி நோக்கின் மகாயோக பூசை, யுயிர்ப்பெறு மாவா கனமபுறப் பூசை, செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. (உ)

நாடு நகரமு நற்றிருக் கோயிலுந், தேடித் திரிந்து சிவ பெரு மானென்று, பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின், கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. (ஙு)

பத்தர் சரியை படுவோர் கிரியையோ, ரதகு தொண்ட ருளவேடத் தாகுவோர், சுத்த வியமாதி சாதகர் தூயோ கர், சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே (ச)

சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர், சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோ, ராய்ந்த கிரியை யோ ரர்ச்சனை தப்பாதோர், நேர்ந்த சரியையோர் நீணிலத் தோரே. (ரு)

கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை, யரிய சிவனுரு வ மரு மருவப், தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை, யுரியன் நேயத் துயர்பூசை யாமே, (சு)

சரிதாதி நான்குந் தருஞான நான்கும், விரிவான வேதாந் த சித்தாந்த மாறும், பொருளான நந்தி பொன்னடிப் பேற க்கு, மருளாரு மாந்தர் வணங்கவைத் தானே (எ)

[illegible] பஞ்சசுத்தித் [illegible], [illegible] விசே

டமு மரன்மக் கிரகசத்தி, சமைய திருவாணைக் கலாசுத்தி யா
கு, மமைமன்று ஞான மார்க்கம் மபிடேகமே. (அ) ஆ. ௩௨.

---

## கிரியை.

பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண், டெத்திக் கில
ரில்லை யெனபதி னைமலர்க, கொத்தத திருவடி நீழல் சரணெ
னத், தத்தும வினைககடல் சாராது காணுமே. (௧)

காணுறு கோடி கடிகமழ சந்தனம், வாணுறு மாமலரிட்
டு வணங்கினு, மூவினை நீக்கி யுணர்பவர்க கல்லது, தேனமா பூ
கழல் சேரவொண் ணாதே. (௨)

கோனககனா குயே குரைகழ லேத்துமின், ஞானககனா
குகிய நடுவே யுதிக்கும, வானககனா குகிய வானவா கைதொ
ழு, மானககன் ஈசனருள்வள்ள மாமே. (௩)

இதுபணிந் தெண்டிசை மண்டல மெல்லா, மதுபணி செ
ய்கின் றவனொரு கூற, விதுபணி மாறுடா செயபணி யீசன,
பதிபணி செய்வது பத்திமை காணே. (௪)

பத்தன கிரியை சரிதை பயில்வுற்றுச, சுத்த வருளாற் று
ரிசற்ற போகத்து, ஓய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தா
ற, சித்தங் குருவருளாற் சிவ மாகுமே (௫)

அன்பின் னுருகுவ னாளும் பணிசெய்வன், செம்பொ
ன் செய்மேனி கமலத் திருவடி, முன்புநின் றாங்கே மொ
ழிவ தெனக்கரு, ளன்பினுட் சோதி யிலங்குகின் றானே. (௬)

ஆ. ௩௮.

---

## யோகம்.

செறிவழி யேசென்று சேர்மையு ளொன்றித், தறியிருந்
தாட்போலத் தம்மை யிருத்திச், சொறியினுந் தாக்கினுந் த
ன்னென்னுணராக், குறியறி வாளர்க்குக் கட்டுரையாமே. ()

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது, ஊழிதோ றூழி யுணரவுங் கிற்கொட்டா, ஞாழி யமரு மரியய னென்றுளார், ஞாழி முயன்றுமொ ருசிவ னாமே (உ)

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற், சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது, ஓவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு, நாவி யணைந்த நடுநாடி யாமே (௩)

உய்ந்தன மென்றுநீ ருறுபொருள் காணகிலீர், கந்த மலரிற் கரக்கின்ற கந்தியைச், சிந்தை யுறவே தெளிந்திரு ளேகினால், முந்தப் பிறவிக்கு மூலவித் தாகுமே. (௪)

எழுத்தொடு பாடலு மெண்ணெண் கலையும், பழுத்தலைப் பாசப் பிறவியு நீங்கா, வழுத்தலைச் சோமனோ டங்கி யருக்கனை, வழுத்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே (௫)

விரும்பிநின் றேசெப்பின் மெய்த்தவ ராகும், விரும்பிநின் றேசெய்யின் மெய்யுரை யாகும், விரும்பிநின் றேசெய்யின் மெய்த்தவ மாகும், விரும்பிநின் றேசெயின் விண்ணவ னாகுமே ()

பேணிற் பிறவா வுலகருள் செய்திடுங், காணிற் றனது கலவியு ளேநிற்கு, நாணி னரகநெறிக்கே வழிசெயு, மூனிற் சுழிமங்கி யுந்தமன் றானே (எ)

ஒத்தசெங் கோலா ருவப்பிலி தாதவ, ரெத்தனை யாயிரம் வீழ்ந்தவ ரெண்ணிலி, சித்தர்க டேவர்கள் மூவா பெருமையா, மத்த னிவனென்றே யன்புறு வார்களே (அ)

யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டிற்றோ, ராகத் தக்கிரி யாதி சரிதையாந், தாகத்தை விட்ட சரிதையோன் றாமெ னாறு, ளாதித்தன் பத்தியு ளன்புவைத் தேனே. (௯)

யோகச் சமயமே யோகம் பலவுங்கல், யோகவி சேடமே யட்டாங்க யோகமாம், யோகநிர் வாணமே யுற்றப ரோதயம், யோகவி சேடமே யோன்சித்தி யுற்றலே (௧௦) ஆ-சஅ

---

## ஞானம்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை, ஞானத்தின் மி
க்க சமயமு நன்றன்று, ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்கா
வா, ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே. (௧)

சத்தமுஞ் சத்த மனனுந் தகுமன, முய்த்த வுணர்வு மு
ணர்த்து மகந்தையுஞ், சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ்
செய்கையுஞ், சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. (௨)

தன்பா லுலகுந் தனக்கரு காவது, மன்பா லெனக்கரு
ளாவது மாவன,வென்பாற்கண் ஞானமு மெய்துஞ் சிவோகமு
ம, பின்பாலி னேயமும் பெற்றிடுந் தானே (௩)

இருக்குஞ் செம்மி யிடம்பிரம மாகும், வருக்கஞ் சராசர
மாகு முலகந், தருக்கிய வாசார மெல்லாந் தருமே, திருக்குமி
ல் ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே. (௪)

அறிவு மடக்கமு மன்பு முடனே, பிறியா நகர்மனனும் பே
ரருளாளன், குறியுங் குணமுங் குறைகழ வீயகா, நெறியறி
யார்க்கிது நீர்த்தொளி யாமே. (௫)

ஞானம் விளங்கெழு கின்றதோர் சிந்தையு, ளானம வி
ளக்கெதி ரேகாண் வழிதொறு, மூனல் மதிமண்ட லத்தெ
திர் நீர்கண்டு, வூன மறுத்துநின் றொண்சுட ராகுமே. (௬)

ஞானிக் குடன்குண ஞானத்தி னான்குமா, மோனிக் கி
வையொன்றுங் கூடாமுன மோகித்து,மேனிற்ற லாஞ்சத்தி வி
த்தை விளைத்திடு, தானிக குலத்தோர் சரிதை கிரியையே. (௭)

ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு, ஞானத்தின்
ஞானமே நானென தென்னுமல், ஞானத்தில் யோகமே நாதா
ந்த நல்லொளி, ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. (௮)

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன், புண்ணி
யபாவங் கடந்த பிணக்கற்றோன், நண்ணிய ஞேயம் ஞாஞான
ங் கண்டோன், திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. ()

ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல், ஞான விசேட மேநாடும் பரோதயம், ஞான நிர்வாணமே நன்றறி வானருள், ஞானபி டேகமே நற்குரு பாதமே. (கo) ஆ௳ ருஅ

---

சன்மார்க்கம்.

சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத், தோற்றங் களான சுருதிச் சுடர்க்கண்டு, சீற்ற மொழிந்து சிவயோக சித் தராயக், கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (க)

சைவப் பெருமைத் தனிநா யகனந்தி, யுய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு, தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேரத் துய்ய, வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. (உ)

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப், பரிசிக்கக் கீர்த் திக்கப் பாதுகஞ் சூடக், குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத், தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. (௩)

தெளிவறி யாதார் சிவனை யறியார், தெளிவறி யாதார் சிவனு மாகார், தெளிவறி யாதார் சிவமாக மாட்டார், தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. (௪)

தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று, மோனம தாமொழிப் பான்முத்த ராவது, மீனமில் ஞானானு பூதியி லின்பமுந், தானவ னாயுற்ற லானசன் மார்க்கமே (ரு)

சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ், சன்மார்க் கத் தார்க்கு மிடத்தொடு தெய்வமுஞ், சன்மார்க்கத் தார்க் கு வருக்கந் தரிசந, மெம்மார்க்கத் தார்க்கு மியம்புவன் கே ண்மினே. (௬)

சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம், பின்மார்க் க சாதனம் பேதையர்க் காய்நிற்குந், துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றோர், சன்மார்க்கத் தானவ ராகுஞ்சன் மார்க் கமே. (௭)

சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப், பின்மார்க்க முன்னறும் பெறலியல் பாமென்று, என்மார்க்கந் தானே சிவனொடு கூடலே, சொன்மார்க்க மென்னச் சுருதிகை கொள்ளுமே. (அ)

அன்னிய பாசமு மாகுங் கருமமு, முன்னு மலத்தையு மூலப் பகுதியும், பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந், தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே (௯)

பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக், கசியாத நெஞ்சங் கசியக் கசிவித், தொசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற், றசைவான தில்லாமை யான சன் மார்க்கமே (௰)

மார்க்கஞ்சன் மார்க்கிகட் கெட்டு வகுப்பது, மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை, மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர், மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே (௧௧) ஆ. கக.

---

சகமார்க்கம்

சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது, மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம், பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந், துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே. (௧)

மருவுந் துவாதச மார்க்கமில் லாதார், குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார், வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகு, முருவுங் கிளையு மொருங்கிழப் பாரே. (௨)

யோகச் சமாதியி னுள்ளே யகலிடம், யோகச் சமாதியி னுள்ளே யுளரொளி, யோகச் சமாதியி னுள்ளே யுளசத்தி, யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே. (௩)

போகமும் யோகமும் யோகியர்க் காகுமால், யோகஞ் சிவரூப முற்றிடு முள்ளத்தோர், போகம் புவியிற் புருடார்த்த சித்தியத் தாகு மிரண்டு மழியாத யோகிக்கே. (௪)

நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை, யென்றுந் தொழுவ னெழிற்பரஞ் சோதியைத், துன்று மலர்தூவித் தொழுமின் றொழுந்தோறுஞ், சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. (௬)

திருமன்னுஞ் சற்புத்திர மார்க்கச் சரிதை, யுருமன்னி வாழு முலகத்தீர் கேண்மின், கருமன்னு பாசங்கை கூம்பத் தொழுது, விருமன்னு நாடோறு மின்புற் றிருந்தே. (௭) ஆ. ௮௩.

தாசமார்க்கம்.

எளியன தீப மிடுமலர் கொய்த, லளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தற், பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி, தளிதொழில் செய்வது தான்றாச மார்க்கமே (௧)

அதுவிது வாதிப் பரமென றகல்வ, ரிதுவழி யென்றங்கி றைஞ்சின ரில்லை, விதிவழி யேசென்று வேதனை நாடி, மதுவிது நெஞ்சிற் றணிகின்ற வாறே. (௨)

அந்திப்பல திங்களதனைப் பிலப்பு ஞாயிறு, சிந்திப்ப னென்று மொருவனை சேர்கழல், வந்திப்ப வானவர் தேவனை நாடோறும், வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே (௩)

அண்ணலை வானவ ராயிரம் பேர்சொல்லி, யுண்ணுவ ருண்மகிழ்ந் துண்ணின் றடிதொழக், கண்ணவ னென்று கருது மவர்க்கட்குப, பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. (௪)

வாசித்தும் பூசித்து மாமலர் கொய்திட்டும், பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனமா பார்க்கின், மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை, நேசத் திருந்த நினைவறி யாரே (௫) ஆ. ௮௪.

சாலோகம்.

சாலோக மாதி சரிதாதி யிற்பெறுஞ், சாலோக சாமீபந் தக்குஞ் சரியையா, லேலோகஞ் சேரில் வழியாகுஞ் சா

ரூபம், பரலோக மில்லாப் பரனுரு வாமே. (க)

சமயங் கிரியையிற் றன்மனங் கோயிற், சமய மனுமுறை தானே விசேடஞ், சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றுஞ், சமயாபி டேகமே தானுஞ் சமாதியே. (உ) ஆ. ௬௩.

---

சாமீபம்.

பாசம் பசுவான தாகுமிச் சாலோகம், பாச மருளான தாகுமிச் சாமீபம், பாசஞ் சிவமான தாகுமிச் சாரூபம், பாசங் கரைபதி சாயுச் சியமே (க) ஆ. ௬௪.

---

சாரூபம்.

தங்கிய சாரூபந் தானெட்டாம யோகமாந், தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா, வங்கத் துடல்சித்தி சாதன ராகுவ, ரிங்கிவ ராக விழிவற்ற யோகமே. (க)

சயில லோகத்தினைச் சார்ந்த பொழுதே, சயிலம தாகுஞ் சராசரம் போலப், பயிலுங் குருவின பதிப்புகக போதே, கயிலை யிறைவன் கதிர்வடி வாமே (உ) ஆ. ௬௫.

---

சாயுச்சியம்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது, சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதற், சைவஞ் சிவந்தனைச் சாராம லீவுதற், சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. (க)

சாயுச் சியஞ்சாக்கி ராதீதஞ் சாருதல், சாயுச் சியமுப சாந்தத் துத தங்குதற், சாயுச் சியஞ்சிவ மாதல் முடிவிலாச், சாயுச் சியமனத் தானந்த சத்தியே. (உ) ஆ. ௬௬.

---

சத்திநிபாதம்-மந்தம்.

இருட்டறை மூலை யிருந்த குமரி, குருட்டுக் கிழவனைக்,

கூடற குறிததுக், குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி, மரு ட்டி யவனை மணம்புரிந தானே. (க)

தீம்புல னான திசையது சிந்திக்கி, லாம்புல னாயறி வா ர்க்கமு தாய்நிற்குந், தேம்புல னான தெளிவறி வார்கட்குக், கோம்புல னாடிய கொல்லையு மாமே. (உ)

இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி, யருணீங்கா வண் ணமே யாதி யருளு, மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப், பொருணீங்கா வின்பம் புலம்பயில் தானே. (ங)

இருளது மூலமி லிருந்தது நாடிற், பொருள்சூழ் விளக் கது புகசெறிந தாபபோன், மருள்சூழ மயக்கத்து மாமலர் நந்தி, யருளது பிறைவனு மாமையு மாமே. (ச) ஆ கக.

---

மந்தரம்

மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி, வெருட்டி வினை பறு த் தினபம் விளைத்துக், குருட்டினை நீக்கிக் குணம்பல காட் டி, யருட்டிகழ ஞான மதுபுரிந தானே (க)

கனனித துறைபடிந தாடிய வாடவா, கன்னித் துறை படிந தாங் கருத்திலா, கனனித் துறைபடிந் தாடுங் கருத் துண்டேற், பின்னைப் பிறவிப் பிறிதில்லை தானே (உ)

செய்யன் கரியன வெளியனற் பச்சைய, னெய்த வுணர் நதவ ரெய்வ திறைவனை, மைவென் றகன்ற பகடுரி போர்த்த வெயு, னைய னிவனென்று காதல்செய் வீரே (ங)

எய்திய காலங்க ளெத்தனை யாயினுந், தையலுந் தானுந் தனிநா யகமென்பர், வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக், கையிற் கருமஞ்செய் காட்டது வாமே. (ச)

கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி, ப ண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர், வண்டுகொண் டாடு ம

லர்வார் சடையண்ணலின்றருகண் டார்க்கிருணீக்கிநின் றானே

ஆ கoச.

---

## தீவிரம்.

அண்ணிக்கும் பெண்பிள்ளை யப்பனார் தோட்டத்தி, லெ ண்ணிக்கு மேழேழ பிறவி யுணர்விக்கு, ம்பண்ணிற்ப தெல்லா மொழிய முதல்வனைக, கண்ணுற்று நின்ற கனியது வாகுமே.

பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கு, மறப்பை யறுக்கு ம் வழிபட வைக்குங், குறப்பெண் குவிமுலை கோமள வல்லி, சிறப்பொடு பூசனை செய்யநின் றாளுக்கே. (உ)

தாங்குமி னெட்டுத் திசைக்கு நாயகன், பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடு, மாங்கது சேரு மறிவுடை யார் கட்குச, தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே (ங)

ஒணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்குமு, பண்ணிலும் பன்மலர் தூவிப் பணிய, வணுகிய தொன்றறி யாத வொருவ, னணுகு முலகெங்கு மாவியு மாமே. (ச) ஆ கoரு.

---

## தீவிரதரம்.

இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி, குருவென வந்து குணம்பல நீக்கித், தருமெனு ஞானத்தாற் றனசெய லற்றாற், றிரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (க)

இரவும் பகலு மிலாத விடத்தே, குரவஞ் செய்கின்ற கு ழலியை யுன்னி, யரவஞ் செய்யாம லவளுடன் சேரப், பரிவொ ன் றிலாளும் பராபரை தானே. (உ)

மாலை விளக்கு மதிபமு ஞாயிறுஞ், சால விளக்குந் தனி ச்சுட ரண்ணலுள் ஞானம் விளக்கிய காதலன், ஞாலமுநுத், துலை மிளக்கி யுடனிருந் தானே. (ங) ஆ கக.

---

## புறசமய தூஷணம்.

ஆயத்து ணின்ற வறுசம யங்களுங், காயத் துணின்ற கடவுளைக் காண்கிலா, மாயக் குழியில் விழுவர் மனைமக்கள், பாசத்தி லுற்றுப பதைக்கின்ற வாறே. (க)

உள்ளத்து ளேதான கரந்தெங்கு நின்றவன், வள்ளற் றலைவன் மலருறை மாதவன, பொள்ளக் குரம்பைப் புகுநது புறப்படு, கள்ளத் தலைவன கருததறி யார்களே. (உ)

உள்ளத்து முள்ளன புறத்துள னெனபவர்க், குள்ளத்து முள்ளன் புறத்துள னெம்மிறை, யுள்ளத்து மில்லை புறத்தில்லை யெனபவாக, குள்ளத்து மில்லை புறததில்லை தானே.()

ஆறு சமயமுங் கண்டவா கண்டில, ராறு சமயப் பொருளும் பயனில்லை, தேறுமின தேறித் தெளிமின தெளிந்தபின, மாறுத லின்றி மனைபுக லாமே (ச)

சிவமல்ல தில்லை யறையே சிவமாந், தவமல்ல தில்லை தலைப்படுவார்க்கிங், கவமல்ல தில்லை யறுசம யங்கள், தவமல்ல நந்திதாட் சார்ந்துய்ய நீரே (ரு)

அண்ணலை நாடிய வாறு சமயமும், விண்ணவ ராகமிகவும் விரும்பியே, முண்ணின றழியு முயன்றில ராதலான், மண்ணின் றொழியும் வகையறி யார்களே. (சு)

சிவகதி யேகதி மற்றுள்ள வெல்லாம், பவகதி பாசப் பிறவியொன றுண்டு, தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில், அவகதி மூவரு மவ்வகை யாமே. (எ)

நூறு சமய முளவா நுவலுங்கா, லாறு சமயமவ் வாறுட படுவன, கூறு சமயங்கள கொண்ட நெறிநில்லா, வீறு பரநெறி யில்லா நெறியனறே. (அ)

கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள், சுத்த சிவனெங்கு தோய்வுற்று நிற்கின்றான், குற்றந் தெரியாக் குணங்கொண்டு கோதாட்டார், பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

மயங்குகின் றாரு மதிதெளிந் தாரு, முயங்கி யிருவினை மு
ழைமுகப் பாச்சி, யியங்கிப் பெறுவரே லீறது காட்டிப், பயங்
கெட் டவர்க்கோர் பரநெறி யாமே. (கo)

சேய னணியன பிணியிலன் பேர்நந்தி, தூயன துளக்கற
நோக்கவல் லார்கட்கு, மாயன் மயக்கிய மானுட ராமவர், கா
யம் விளக்குங் கருத்தறி யாரே (கக)

வழியிரண் டுக்குமோர் வித்தது வான, பழியது பார்மி
சை வாழ்த லுறுதல், சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்,
றழிவறி வார்நெறி நாடநில் லாரே (கஉ)

மாதவ ரெல்லாமா தேவன பிரானெனபர், நாதம தாக
வறியப் படுநந்தி, பேதஞ்செய் யாதே பிரானென்று கைதொ
ழி, லாதியு மாநெறி யாகிநின் றானே. (கங)

அரனெறி யப்பனை யாதிப் பிரானை, யுரநெறி யாகி யுளம்பு
குந் தானைப், பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம், பரனறி யா
விடிற் பல்வகைத் தூரமே. (கச)

பரிசற வானவன் பண்பன் பகலோன், பெரிசறி வானவ
ர் பேற்றிற் றிகழுந், துரிசற நினைனை தூய்மணி வண்ண, னரிதவ
வைத்த வறநெறி தானே (கரு)

ஆன சமய மதுவிது நன்றெனு, மாய மனிதர் மயக்க ம
துவொழி, கானங் கடந்த கடவுளை நாடிமின், னூனங் கடந்த
வுருவது வாமே. (கசா)

அரநெறி நாடிய வமரர் முனிவருஞ், சென்னெறி கண்டா
ர் சிவனெனப் பெற்றார்பின், முன்னெறி நாடி முதல்வ னருளி
லார், சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே. (கஎ)

உறுமா றறிவது முண்ணின்ற சோதி, பெறுமா றறியிற் பி
ணக்கொன்று மில்லை, யறுமா றதுவான வங்கியு ளாங்கே, யி
றுமா றறிகில ரேழைக டாமே. (கஅ)

வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங், கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர், சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப், பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. (௨௧)

வழிசென்ற மாதவம் வைகின்ற போது, பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே, வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட், டூழிசெல்லி லும்பர் தலைவன்முன் னாமே. (௨௨)

ஆ ௧௩௧.

---

நிராகாரம்.

இமையங்க ளாய்நின்ற தேவர்க ளாறு, சமையங்கள் பெற்றனர் சாத்திர மோதி, யமையறிந் தோமென்ப ராதிப் பிரானுஞ், சமையறிந் தாருட் கலந்துநின் றானே. (௧)

பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி, தாங்கு மனிதர் தரணியி னேரொப்பர், நீங்கிய வண்ண நினைவுசெய் யாதவ, ரேங்கி யுலகி லிருந்தழு வாரே. (௨)

இருந்தழு வாரு மியல்புகெட் டாரு, மருந்தவ மேற்கொண் டங்கண் ணிலையெண்ணில், வருந்தா வகைசெய்து வானவர் கோனும், பெருந்தன்மை நல்கும பிரப்பில்லை தானே. (௩)

தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர், பாரறி வாளர் படுபயன் றுண்பர், காரறி வாளர் கலந்து பிறப்பார்கள், நேரறி வாளர் நெடுமா முகிலாமே. (௪)

அறிவுடன் கூடி யழைத்ததோர் தோணி, பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங், குறியது கண்டுங் கொடுவினை யாளர், செறிய நினைக்கிலர் சேவடி தானே. (௫)

மன்னு மொருவன் மருவு மனோமய, னென்னின் மனித ரிகழ்வரிவ் வேழைகள், பின்னை மனமே தொழுமின் தலையிலி, தன்னை யங்கே தலைப்பட லாமே. (௬)

ஓங்காரத் துள்ளொளி யுள்ளே யுதயமுற், றூங்கார மற்ற வருபவங் கைகூடார், சாங்கால முன்னார் பிறவாமை சார்வு றார், நீங்காச் சமயத்து ளின்றெழுந் தார்களே. (எ) ஆ௳ கஙௌ

உட்சமயம்.

இமையவர் தம்மையு மெமமையு முன்ன, மமைய வகுத்தவ னாதிப் புராணன, சமையங்க ளாறுந தனருளின்கீழ்கொடா, வமையங் குழல்கின்ற வாதிப் பிரானே (க)

ஒன்றது பேரூர் வழியா றதற்குள, வென்றது போல விருமுச சமயமு, நன்றிது தீதிது வெனறுரை யாளர்கள், குன்றுகுரைத்தெழு நாயையொத் தாரசளே. (உ)

சைவப் பெருமைத தனிநா யகனறனனை, யுய்ய வுயிர்க்கின்ற வொளிசுடர் நந்திபை, மெப்ப பெருமையர்க ளனபனை யின்பஞ்செய், வையத் தலைவனை வந்தடை ந்துய்மினே. (ங)

சிவனவன வைத்ததோர் தெய்வ நெறியிற, பவனவன வைத்த பழவழி நாடி, யிவனவ னெனப தறியவல் லார்கட் கவனவ னங்குள தாங்கட னாமே (௪)

ஆமா றுரைக்கு மறுசம யாதிக்குப், போமாறு தானில்லை புண்ணிய மல்லதங், காமாம் வழியாககு மவ்வே றுயிர்கட்கும், போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. (ரு)

அரநெறி யாவ *தறிந்தேனு நானுஞ், சிலநெறி தேடித் திரிந்தவக காளு, மரநெறி யுள்ளக் கடலகடந் தேறுந், தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. (சு)

தேர்ந்த வரனை யடைந்த சிவநெறி, பேர்ந்தவ ருன்னிப் பெயர்ந்த பெருவழி, யார்ந்தவ ரண்டத்துப் புக்க வருநெறி, பேர்ந்து புனைந்து புணர்நெறி யாமே. (எ)

சரு மனத்தினை யிரண்டற விசையின், றூறுஞ் சமயத்தை யோதுமின் றோதியே, வாரு மரனெறி மன்னியேமுன்னியுத்,

தாருஞ் சுடரொளி தோன்றலு மாமே. (௮)

மினற்குறி யாளனை வேதியர் வேதத், தனற்குறி யாளனை யாதிப் பிரானரனை, நினைகுறி யாளனை ஞானக கொழுந்தி, னயகுறி காணி லரனெறி யாமே. (௯)

ஆய்ந்துண ராரகளி னுணமாச் சதிர்பல, வாய்ந்துண ராவகை நின்ற வரனெறி, பாய்ந்துணர் வாரரன சேவடி கைதொழு, தேர்ந்துணரா செய்வதோ ரினபமு மாமே. (௧௦)

சைவச் சமயத தனிநா யகனநதி, யுய்ய வகுத்த குருநெறி யொனறுணடு, தெய்வச சிவநெறி சனமாக்கஞ் சேரநதுய்ய, வையதது ளாரக்கு வகுததுவைத தானே. (௧௧)

இத்தவ மதவ மெனறிரு பேரிடும், பிததரைக் காணி னகு மெங்கள பேர்நநதி, யெத்தவ மாகிலென னெஙகுப் பிறக்கிலெ ன, னொத்துணர வாரகொல்லை யூர்புக லாமே (௧௨)

ஆமே பிரானமுக மைந்தொடு மாருயி, ராமே பிரானுக்க சோமுக மாறுள, தாமே பிரானுக்குந் தனசிர மாலைக்கு, நாமே பிரானுக்கு நரரியல் பாமே (௧௩)

ஆதிப் பிரானுல கேழு மளநதவ, னோதக் கடலு முயிர்க ளுமாய்நிற்கும, பேதிப பிலாமையி னின்ற பராசக்தி, யாதிக கடவுளு மநதமு மாமே. (௧௪)

ஆய்ந்தறி வாகளமரர்வித தியாதர, ராய்ந்தறி யாவண நின்ற வரனெறி, வாய்நதறிந தேனவன சேவடி கைதொழக், காய்நதறிந தேனிம்மை யடமைகண டேனே. (௧௫)

அறியவொன் றாகவ வுடம்பின் பயனை, யறியவொன் றாத வறுவகை யாக்கி, யறியவொன் றாத வறுவகை கோசத், தறியவொன் றாதோ ரண்டம் பதிந்ததே. (௧௬)

ஆ * அதிகாரம் - ௨௩௰ - திருமந்திரம் - ௧௬௪

ஐந்தாந்தந்திர முற்றும்.

ஆ, சிறப்புப்பாயிரமுட்பட - அதிகாரம் - ௧௨௰.

கூடிய்திருமந்திரம் - ௧௬௪௨

# ஆறாந் தந்திரம்.



## சிவகுருதரிசனம்

பத்திப் பணித்துப் பரவு மடிநல்கிச், சுத்த வுரையாற் றுரிசறச் சோதித்துச், சத்து மசத்துஞ் சதசத்துங் காட்டலாற், சித்த மிறையே சிவகுரு வாமே. (௧)

பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு, நேசித்த காயம் விடுவித்து நேரே, கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்த, தாசற்ற சற்குரு வம்பல மாமே. (௨)

சித்திக ளெட்டொடுந் திண்சிவ மாக்கிய, சுத்தியு மெண்சத்தித் தூய்மையும் யோகத்துச், சத்தியு மந்திர சாதக போதமும், பத்தியு நாத னருளிற் பயிலுமே (௩)

எல்லா வுலகிற்கு மப்பாலோ னிப்பாலாய், நல்லா ருள்ளத்து மிக்கருள் நல்கலா, லெல்லாரு முய்யக்கொண் டிங்கே யளித்தலாற், சொல்லா னந்த நற்குரு சுத்த சிவமே. (௪)

தேவனுஞ் சுத்த குருவு முபாயத்துள், யாவையு மூன்று முணர்க்குந் துறையாலே, மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால், யாவையு நல்குங் குருபர னன்புற்றே. (௫)

சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய், தத்தனை நல்குருள் காணு வகிழுடர், பொய்த்தகு கண்ணா னமரென்பர் புண்ணிய, ரத்த னிவனென் றடிபணி வாரே. (௬)

உண்மையிற் பொய்மை பொழித்தலு முண்மைப்பார், இன்மையு மொண்மைச் சிவமாய வவ்வரன், வண்மையு மெட்டெட்டுச் சித்தி மயக்கமு, மன்னை லருணெறி யாரறி வாரே. (௭)

சிவனே சிவஞானி யாதலாற் சுத்த, சிவனே யெனவடி சேரவல் லார்க்கு, நவமான தத்துவ நன்முத்தி நண்ணும், பவ

மான தின்றிப் பரலோக மாமே. (௮)

குருவே சிவமெனக் கூறின னந்தி, குருவே சிவமென் பது
குறித் தோரார், குருவே சிவனுமாய் கோனுமாய் நிற்கும், கு
ருவே யுரையுணர் வற்றதோர் கோவே. (௯)

சித்த மியானையுஞ் சிதைத் திருந்திடு, மத்த னுணர்த்துவ
தாகு மருளாலே, சித்த மியானையுந் தின்சிவ மானக்கா, லத்
தனு மவ்விடத் தேயமாந் தானே (௧௦)

தானந்தி சீரமையுட் சந்தித்தச் சீர்வைத்த, கோனந்தி
யெந்தை குறிப்பறி வாரில்லை, வானந்தி யென்று மகிழு மொருவ
ர்க்குத், தானந்தி யங்கித் தனிச்சுட ராமே. (௧௧)

திருவாய சித்தியு முத்தியுஞ் சீர்மை, மருளா தருளு மயக்
கறும் வாய்மைப், பொருளாய வேதாந்தப் போதமு நாத, னு
ருவா யருளா விடிலோர வொண்ணாதே. (௧௨)

பத்தியு ஞானவை ராக்கிய முப்பர, சித்திக்கு வித்தாகு
சிவோகமே சோதலான, முத்தியின் ஞான முளைத்தலா லம்மு
ளை, சத்தி யருடரிற் றுனெளி தாமே. (௧௩)

இலனெய்த வைத்தகோ ரின்பப் பிறப்பினை, முனனெய்த
வைத்த முதல்வனை யெம்மிறை, தன்னெய்துங் காலத்துத் தா
னே வெளிப்படு, மனனெய்த வைத்த மனமது தானே. (௧௪)

சிவமான ஞானந் தெளியவொண் சித்தி, சிவமான ஞான
ந் தெளியவொண் முத்தி, சிவமான ஞானஞ் சிவபரத் தேயேக
ச், சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. (௧௫)

அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ், செறிந்துணர்ந்
தோதித் திருவருள் பெற்றேன், மறந்தொழிந் தேன்மதி மான்
டவர் வாழ்க்கைப், பிறந்தொழிந் தேனிப் பிறவியை நானே. ()

தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவ, னிருக்கின்ற த

ன்மையை யேது முணரார், பிறக்கின்ற வித்தைப் பிணக்கறுத் தெ
ல்லாரு, கருக்கொண்ட வீசனைக் கண்டுகொண் டேனே. (கஎ)

---

## திருவடிப்பேறு.

இசைந்தெழு மன்பி லெழுந்த படியே, பசைந்தெழு மீச
ரைப் பாசத்து ளேகச், சிவந்த குருவந்து சென்னிகை வைக்க,
வுவந்த குருபத முள்ளத் துவந்ததே. (க)

தாடந்த போதே தலைதந்த வெம்மிறை,*வாடந்த ஞான
வலியையுந் தந்திட்டு, வீடந்த மின்றியே யாள்கென விட்டரு
ட், பாடின் முடிவைத்துப் பார்வந்த தந்ததே. (உ)

தானவ னாகிச் சொரூபத்து வந்திட்டு, வான சொரூபங்க
ளொன்று மகற்றின, வேனைய முத்திரை யீந்தாண்ட நன்னந்தி,
தானடி முற்சூடித் தாபித்த தன்மையே (௩)

உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத், திரையற்ற நீர்
போற் சிவமாத றீர்த்துக், கரையற்ற சத்தாதி நான்குங் க
டந்த, சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. (௪)

குரவ னுயிர்முச் சொரூபமுங் கைக்கொண், டரிய பொரு
ண்முத் திரையாகக் கைக்கொண்டு, பெரிய பிரானடி நந்திபேச்
சற்று, வுருகிட வென்னையுங் குய்யக்கொண் டானே. (ரு)

பேச்சற்ற வின்பத்துப் பேரானந் தத்திலே, மாச்சற்ற
வென்னைச் சிவமாக்கி மாள்வித்துக், காச்சற்ற சோதி கடன்மூ
ன்றுங் கைக்கொண்டு, வாச்ச புகழ்மாளத் தாடந்த மன்றுமே.

இதயத்து நாட்டத்து மென்றன் சிரத்துப், பதிவித்த பா
தம் பராபர சத்தி, கதிவைத்த வாறுமெய் காட்டிய வாறும், வி
திவைத்த வாறும் விளம்பவொண் ணாதே (எ)

திருவடி வைத்தென் சிரத்தரு ணோக்கிப், பெருவடி வைத்
தந்த போற்றி தன்னைக், குருவடி விற்கண்ட கோனையென்
கோவைக், கருவழி மாற்றிடக் கண்டுகொண் டேனே (அ)

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும், திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்கும், திருவடி ஞானஞ் சிறைமல மீட்கும், திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. (௯)

மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை, மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும், பால்வைத்த சென்னிப் படரொளி வானவன், றாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே (௧௦)

கழலார் கமலத் திருவடி யென்னு, நிழல்சேரப் பெற்றே னெடுமா லறியா, வழல்சேரு மங்கியு ளாதிப் பிரானுங், குழல்சேரு மின்னுயிர்க் கூடுங் குலைத்ததே. (௧௧)

முடிமன்ன ராகினமூ வுலகம தாள்வ, ரடிமன்ன ரின்பத் தளவில்லை கேட்கின், முடிமன்ன ராய்நின்ற தேவர்க ளீசன், குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. (௧௨)

வைத்தே னடிகண் மனத்தினுள் ளேநான, பொய்த்தே யெரியும் புலன்வழி போகாமல், மெய்த்தே னுழலு மிருவினை மாற்றிட்டு, மெய்த்தே னறிந்தேனவ் வேதத்தி னந்தமே. (௧௩)

அடிசார லாமண்ணல் பாத மிரண்டு, முடிசார வைத்தனர் முன்னை முனிவர், படிசார்ந்த வின்பப் பழவடி வெள்ளங், குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே (௧௩)

மந்திர மாவது மாமருந் தாவது, தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ், சுந்தர மாவதுந் தூய்நெறி யாவது, மெந்தை பிரான்ற னிணையடி தானே. (௧௫) ஆ. ௩௨.

---

ஞாதுருஞானஞேயம்.

நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப், பாங்கான பாசம் படரப் படாறிவு, மாங்கார நீங்கி யதனிலை நிற்கவே, நீங்கா வமுத நிலைபெற லாமே. (௧)

ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி யின்றிடு, ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடுறு, ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்

ழைத யுற்றவ, ராயத்தி னின்ற வறிவறி வாரே. (௨)

தானென றவனென றிரணடாகுந் தத்துவந், தானென றவனென றிரண்டுந் தனிற்கண்டு, தானென்ற பூவை யவனடி சாத்தினு, னென றவனெனகை நல்லதொன றன்றே, (௩)

வைசசன வாறுறு மாற்றி யெனைவைதது, மெசசப் பரனறன் வியாப்துவ மேலிட்டு, நிசசய மாககிச் சிவமாககி ஞேயதது, லச்சங் கெடுதனெனை யாணடன னந்தியே (௪)

முன்னை யறிவறி யாதவம மூடாபோற, பினனை யறிவறி யாமையைப் பேதிததான, றனனை யறியப பரனாககித் தற்சிவ த, தெனனை யறிவித திருநதன னநதியே. (௫)

காணாத கணணுடன கேளாத கேளவியுங, கோணாத போகமுங் கூடாத கூட்டமு, நாணாத நாணமு நாதாநத போதமு ங், காணா யெனவநது காட்டின னநதியே. (௬)

மோனங்கை வநதோாககு முததியுங கைககூடு, மோனங் கை வநதோர்க்குச சிததியு முனனிறகு, மோனஙகை வந்தூ மை யரமொழி முற்றுங்காண, மோனஙகை வநதைங் கருமமு முனனுமே (௭)

முத்திரை மூன்றின முடிந்தது மூன்றின்பால், வைத்த கலைகால் நானமடங் கானமாறறி,யுயததவத தானந்தத தொன ௱ு பாதத்தே, பெதத மறுத்தோர் பிறநதிற வாரே. (௮)

மேலைச் சொரூபங்கண் மூனறு மிகுசத்தி, பாலித்த முத் திரை பற்றும் பரஞானி, யாலித்த கட்டமே ஞேயம் புகுந்தற் ற, மூலச் சொருபன் மொழிஞா துருவனே. (௯) ஆ. ௪௧.

---

துறவு.

இறப்பும் பிறப்பு மிருமையு நீங்கித், துறந்தவர் தங்கள் ட சோதிப் பிரானை, மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்

கட், கறப்பதி காட்டுமமரர் பிரானே (௧)

பிறந்து மிறந்தும்பல் பேதமை யாலே, மறந்து மலவிரு ளிங்க மறைந்து, சிறந்த சிவனருட் சேர்பரு வத்துச், துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. (௨)

அரவன் பிறப்பிலி யாருமிலாதா, னுறைவது காட்டக முண்பது பிச்சை, துறவெனுங் கண்டா துறந்தவர் தம்மைப், பிறவி யறுத்திடும் பித்தனைக் கண்டீரே (௩)

நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தா, னெறியில் வழுவி னெருஞ்சில்முட் பாயு, நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு, நெறியி னெருஞ்சின்முட் பாயகி லாவே. (௪)

கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரு, நாடி வளைந்தது நாணகட் டேனலே, ஞாடல் விடையுடை யண்ணல் திருவடி, கூடுந் தவஞ்செய்த கொள்கையி னானே (௫)

உழவ னுழவுழ வானம் வழங்க, வுழவ னுழவினிற் பூத்த குவளை, யுழவ னுழத்தியர் கண்ணென்று மெண்ணிட், டுழவ னதனை யுழவொழிந் தானே (௬)

மேல்துறந் தண்ணல் விளங்கொளி கூறுவன், நாள்துறந் தார்க்கவ னன்பனல் லாவிலி, கார்துறந் தார்க்கவன் கண்ணுக லாய்நிற்கும், பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே ( )

காகமு மொன்று படமைந்து நாலது, போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது, வாக மிரண்டும் படம்விரித் தாட்டொழிந், தேகப் படஞ்செய் துடம்பிட மாமே. (௮)

அகன்றார் வழிமுத லாதிப் பிரானு, மிவனன்று னென்னின் றெளியனு மல்லன், சிவன்றான் பலபல சீவனு மாகு, நயன்றான் வரும்வழி காமறி யோமே. (௯)

காம்பு திறந்தன வொன்பது வாயதனு, மாம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது, வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூ

றையிற், கூம்பேறிக் கோயிலிற் பூக்கினை றவாறே. (௬௦) ஆடு ருக.

---

## தவம்.

ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ளம், நடுங்குவ தில்லை நம னுமங் கில்லை, யிடும்பையு மில்லை யிராப்பக லில்லை, படும்பய னில்லை பற்றுவிட் டோர்க்கே (௧)

எம்மா ருயிரு மிருநிலத் தோற்றமுஞ், செம்மா தவத்தின் செயலின் பெருமையு, மம்மான் றிருவருட் பெற்றவர் கல்லா, லிம்மா தவத்தி னியல்பறி யாரே (௨)

பிறப்பறி யார்பல பிச்சைசெய் மானுடர், சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர், மறப்பில ராகிய மாதவஞ் செய்வார், பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. (௩)

இருந்து வருந்தி யெழிற்றவஞ் செய்யும், பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே, யிருந்திந் திரனே யெவரே வரினு, மிருந்துந்தஞ் சிந்தை சிவனவன் பாலே (௪)

கரந்துங் கரந்திலன் கண்ணுக்குத் தோன்றான், பரந்த சடையன் பசும்பொன் னிறத்த, னருந்தவர்க் கல்லா லணுகலு மாகான், விரைந்து தொழப்படு மெண்ணரி யானே. (௫)

இன்னெய்த வைத்ததோ ரின்பப் பிறப்பினை, முன்னெய்த வைத்த முதல்வனை யெம்மிறை, தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு, மன்னெய்த வைத்த மனமது தானே. (௬)

அமைச்சரு மானைக் குழாமு மரசும், பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே, யமைத்ததோர் ஞானமு மாத்தமு நோக்கி, யிமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே. (௭)

சாத்திர மோதுஞ் சதிர்களை விட்டுநீர், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின், பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோ, லார்த்த பிறவி யகலவிட் டோடுமே. (௮)

தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டிற், றவம்வேண் டா ஞான சமாதிகை கூடிற், றவம்வேண்டா மச் சகசமாக கத்தோர்க்குத், தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே (க)

அ. கா.

தவதூடணம்

ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றாற், காதலும் வே ண்டாமெய்க் காய மிடங்கண்டாற், சாதலும் வேண்டாஞ் ச மாதிகை கூடினாற், போதலும் வேண்டாம் புலன்வழி போகா ரக்கே. (உ)

கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற், சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற், சுத்தமும் வேண்டாந் துட கற்று நிற்றலாற், சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே

வினைவறி வாரபண்டை மெய்த்தவஞ் செய்வார், வினைவ றி வாரபண்டை மெய்யுரை செய்வார், வினைவறி வார்பண்டை மெய்யாறு செய்வார், வினைவறி வாவினையின் மண்ணினதி ககாரே. (ந)

கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல், தேடித் தவ ஞ்செய்து கண்டேன் சிவகதி, வாடித் தவஞ்செய்வ தேதவ மி வைகளந், தாடிப் பலவுல கோரேத் தவரே (ச)

மனத்துறை மாகட லேழுங்கை நீந்தித், தவத்திடை யா ளர்தஞ் சார்வத் துவந்தார் பவத்திடை யாளரவாயணி கேட கின, முகத்திடை நந்தியை முந்தலு மாமே. (ரு)

மனத்திடை நின்ற மதிவா ளுருவி, யினத்திடை நீக்கி யி ரண்டற வீர்த்துப், புனத்திடை யஞ்சும் போகாமல் மறித்தா ற், றவத்திடை யாமொளி தனொளி யாமே. (சு)

ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது, பத்தி கொடுக்கும் ப ணிந்தடி யார்தொழு, முத்தி கொடுக்கு முனிவ னெனும்பதச்,

சத்தான செய்வதுந் தான்றவந் தானே. (௭)

இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி, மலர்தொட்டுக் கொண்டே வரும்புனல் காணேன, தலைதொட்டு னாற்கண்டு தாழ்ந்தநெஞ் ஞாளந, தலைதொட்டுக் கண்டேன தவங்கண்ட வாறே (௮)

படாசடை மாதவம் பத்திய பத்தாச, விடாசடை யாவனை மீசனருளு, மிடாசடை செய்தவா மெய்த்தவ நோக்கி, யுடாசடை செய்வ தொருமனத் தாமே (௯)

ஆற்றிற கிடந்த முசலைக்கண் டஞ்சிப்போ, யீற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கு, நோற்றுந் தவஞ்செய்யா தார்பொறி யாகவா, சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே (௧௦)

பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங், குழக்கன்று துள்ளியக் கோணியைப் புல்கார, குழக்கன்று கொட்டிற் சட்டவல் லார்க்குள, விழுக்காது நெஞ்சத் திடவொன்று மாமே (௧௧)

சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவாற், சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோ ருறவுண்டாற், சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ், சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே ()
(௧௨) ஆ ௭௨

---

அருளுடைமையின் ஞானம்வருதல்

பிரானரு ளுண்டெனி லுண்டுநற் செல்வம், பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம், பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு, பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே (௧)

தமிழ்மண் டலமைந்துந் தாவிய ஞான, முமிழ்வது போல வுலகந் திரிவா, நவிழு மனமுமெம் மாதி யறிவுந், தமிழ்மண் டலமைந்துந் தத்துவ மாமே. (௨)

புண்ணிய பாவ மிரண்டுள பூமியி, னண்ணும் பொழுதறி
வாரசில ஞானிக, ளெண்ணி யிரண்டையும் வேரறுத் தப்புறத்,
தண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வீரே. (௩)

முன்னின் றருளு முடிகின்ற காலத்து, நன்னின் றுலகி ன
டுயி ராய்நிற்கும், பின்னின் றருளும் பிறவியை நீக்கிடு, முன்
னின் றெனக்கொரு முத்திதந் தானே (௪)

சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர், சிவனரு ளாற்சிலர்
தெய்வத்தோ டொப்பர், சிவனரு ளால்வினை சேரகிலாமை,
சிவனருட் கூறிடச் சிவலோக மாமே (௫)

புண்ணிய னெந்தை புனித னிணையடி, நண்ணி விளக்கெ
ன ஞானம் விளைந்தது, மண்ணவ ராவது மானவ ராவது
மண்ண லிறைவ னருள்பெற்ற போதே (௬)

காலத்தே றி மனப்பாகன் கைகூட்ட, மாயத்தே றி
மயங்கு மவையுணா, நேயத்தே றி நிமல னருள்பெறின், லா
யத்தே றி யவனிவ னாமே (௭)

அவ்வுல கத்தே பிறந்தி லுடலொடு, மவ்வுல கத்தே யருந்
தவர் நாடுவ, ரவ்வுல கத்தே யரனடி கூடுவ, ரவ்வுல கத்தே
யருள்பெறு வாரே (௮)

சத்திகண்ட காந்தங் கனலின் வடிவா, மத்திகண்ட காந்த
மணிநீர் வடிவாகு, சத்திகொண்ட சாக்கி யெரியின் வடிவா, மெ
ரிகொண்ட ஈச னெழில்வடி வாமே (௯)

நாடு முறவுங் கலந்தெங்க ணந்தியைத், தேடுவன் றேடிச்
சிவபெரு மானென்று, கூடுவன் கூடிக் குறைகழற் கேசெல, வீ
டு மளவும் விடுகின்றிலேனே. (௧௦) ஆக ௮௨

---

## அவவேடம்.

ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன், வேடங்கள்

கொண்டு வெருட்டிடும் பேதைகா, ளாடியும் பாடியு மழுது மரற்றியுந், தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே (௪)

ஞான மிலார்வேடம் பூண்டிந்த நாட்டிடை, யீன மதே செய் திரந்துண் டிருப்பினு, மான நலங்கெடு மப்புவி யாதலா, லீனவர் வேடங் கழிப்பித்த லின்பமே (௫)

இன்பமுந் துன்பமு நாட்டா ரிடத்துள, நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்கா, மென்ப விறைநாடி நாடொறு நாட்டினின், மன்பதை செப்பஞ் செயின்வைய வாழுமே, (௬)

இழிகுலத் தார்வேடம் பூண்பரே லெய்த, வழிகுலத் தோர்வேடம் பூண்பர்மே வாகப், பழிகுலத் தாகிய பாழ்ச்சண்ட ராவர், கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே (௭)

பொய்த்தவஞ் செய்வார் புகுவார் நரகத்துப், பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகாரே, பொய்த்தவ மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ், சத்திய ஞானத்தா றங்குந் தவங்களே (௮)

பொய்வேடம் பூண்பர் பொசித்தற் பயனா, மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர், பொய்வேட மெய்வேடம் போதவே பூண்டினு, முய்வேட மாகு முணர்ந்தறிந் தோர்க்கே (௯)

---

## தவவேடம்

தவமிக் கவரே தலையான வேட, ரவமிக் கவரே யதிகொலை வேட, ரவமிக் கவர்வேடத் தாகா ரவ்வேடந், தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே (௧)

பூதி யணிவது சாதன மாதியிற், காதணி தாம்பிரக் குண்டலங் கண்டிகை, யோதி யவர்க்கு முருத்திர சாதனந், தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. (௨)

யோகிக் கிடுமது வுட்கட்டு கஞ்சுளி, கோணைக்குப் பாச
த்துச் சுற்றுஞ் சடையதொன, றாகத்து நீறணி யாவகைக்க பா
லஞ், சீகத்த மாத்திரை திணபிரம பாகுமே (௫)

காதணி குண்டலங் கண்டிகை நாதமு, மூதுநற் சங்கு மு
யர்கடிக கபபரை, யேதமில் பாதுக மியோகாநத மாதன,
மேதமி லியோகப் பட்டந்தண்ட மீரைந்தே (௬) ஆ. கஉ.

---

திருநீறு

நூலுஞ் சிகையு முணராகின மூடர்கள், நூலது வேதா
ந்த நுண்சிகை ஞானமாம், பாலொன்று மந்தண பார்ப்பார்
பரமுயி, ரோரொன்ற நிரண்டினி லோங்கார மோதிலே (௧)

கங்காளன பூசுங் கவசத் திருநீற்றை, மஙகாமற் பூச மகி
ழ்விரே யாமாகிற, றஙகா வினைகளுஞ் சாருஞ் சிவகதி, சிங்கா
ர மான திருவடி சேரவரே (௨)

அரசுட னாலத்தி யாகுமக காரம், விரவு கனலில் வியனு
ரு மாறி, நிரவய னினமலன றாளபெறற நீத, ருருவம் பிரம னு
யாகுல மாமே (௩) ஆ. கரு.

---

ஞானவேடம்

ஞான மிலார்வேடம் பூண்டு நரகத்தர், ஞான முளோர்
வேட மின்றெனி னவமுத்தா, ஞான முளதாக வேண்டுவோர்
நக்கனபான, ஞான முளவேட நண்ணிநிற் பாரே. (௧)

புனஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை, நனஞா
னத் தால்வேடம பூணு ரருணண்ணித், தனஞானத் தோரச
ம யத்துறி சுற்றோர், பின்ஞானத் தோரொன்றும் பேசகில்
லாரே. (௨)

சிவஞானி கட்குஞ் சிவயோகிகட்கு, மவமான சாதன மா
காது நேரி, லவமா மவாகத்து சாதன நாடு, முவமான மி
ல்பொரு ளுள்ளுற லாமே (௩)

சுத்தித் திரிவர் கழுவடி நாயபோற், கொத்தித் திரிவர் கு
ரக்களி ஞானிக, ளொத்துப் பொறியு முடலு மிருக்கவே செத்
துத் திரிவர் சிவஞானி யோர்களே (௪)

அடியா ரவரே யடியா ரலாதா, ரடியாரு மாகாரவ் வே
டமு மாகா, ரடியார் சிவஞான மானது பெற்றோ, ரடியா ர
லாதா ரடியார்க ளன்றே (ரு)

ஞானிக்குச் சுத்த வேடமு நல்லவாந், தானுற்ற வேடமு
ந் தற்சிவ யோகமே, யானவவ் வேட மருஞான சாதன, மா
னது மாமொன்று மாகா தவனுக்கே (சு)

ஞானத்தி னொட்பத்த நண்ணுஞ் சிவஞானி, தானத்தி லவை
த்த தனியா லயத்தனு, மோனத்த னாகலின் முத்தனுஞ் சித்த
னு, மேனைத் தவசி யிவனென லாகுமே. (எ)

தானந்தி தன்மையுந் தானவ னாதலு, மேனைய வச்சி
வ மான வியற்கையுந், தானுறு சாதக முத்திரை சாத்தலு, மே
னமு நந்தி பதமுத்தி பெற்றதே (அ) ஆக ௧௦௩

---

சிவவேடம்

அருளா லரனுக் கடிமைய தாகிப், பொருளாந் தனதுடற்
பொற்பதி நாடி, யிருளான தின்றி யிருஞ்செய லற்றோர், றெ
ருளா மடிமைச் சிவவேடத் தாரே. (க)

உடலிற் றுவக்கிய வேடமுயிர்க் காகா, வுடல்கழன் றால்
வேட முடனே கழலு, முடலுயி ருண்மையென் றோர்ந்துகொள
ளாதார், கடலி லகப்பட்ட கட்டையொத் தாரே. (உ)

மயலற் றிருளற்று மாமன மற்றுக், கயலுற்ற கண்ணியர் கையிணைக கற்றுத, தயலற றவரோடுந தாமேதா மாகிச, செய லற றிருந்தார் சிவவேடத தாரே (ஙு)

ஒடுங குதிரைக குசைதிண்ணம பற்றுமின, வேடங்கொண டென்செயவீர வேண்டா மனிதரே, நாடுமி னநதியை நமபெரு மானறனனைத, தேடுமின பபொருள செனறெயத லாமே (௪) ஆ உ௦எ

அபக்குவன.

குருட்டினை நீக்குங் குருவினைக கொள்ளார், குருட்டினை நீககாக குருவினைக கொள்வார், குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக, குருடுங் குருடுங் குழிவிழு மாறே (க)

மனத்தி லெழுந்ததோர் மாயககண் ணாடி, நினைப்பி னதனி லிழலையுங காணார், வினைப்பயன போக விளக்கியுங கொள்ளார், புறக்கடை யிச்சித்திருப போகின்ற வாறே (உ)

ஏயெனி லெனனென்ன மாட்டார் பிரசைகள், வாய்முலை பெய்ய மதுரநின றூறிடும், தாய்முலை யாவ தறியார் தமருளோர், ஊனிலை செய்யு முருவிலி தானே (ஙு)

வாபொனறு சொல்ல மனமொனறு சிந்திக்க, நீபொனறு செய்ய வுறுதி நெடுந்தகாய், தீயெனறிங் குனனைத தெளியன றெளிந்தபின, பேயெனறிங் கெனனைப பிறர்தெளி யாரே (௪)

பஞ்சத் துரோகத்துப பாதகர் தம்மை, பஞ்சச் சமயத்தோர் வேந்த னருந்தண்டம, விஞ்சச் செய்திப் புவிவேறே விடாவிடிற், பஞ்சத்து ளாய்புவி முற்றுமபா ழாகுமே (ரு)

தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கனமஞ், சிவத்திடை நின்றது தேவ ரறியார், தவத்திடை நின்றறி யாதவ ரெல்லாம், பவத்திடை நின்றதோர் பாடது வாமே. (கூ)

